# ஸ்ரீ ராமாநுஜன் 251.







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலம் மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை
ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ: P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 21 | ஸௌம்யஸூ கார்த்திகைமீ<br>1969 நவம்பர் | ஸஞ்சிகை 11 |
|---|---|---|


## நாற்றெட்டுத் திருப்பதியந்தாதி
## 18. திருவாலிதிருநகரி

கழன்றுபோம் வாயுவினைக் கட்டாமல் தீர்த்தம்
உழன்றுபோ யாடாம லுய்ந்தேன்—அழன்று
பொருவாலி காலன் பரகாலன் போற்றும்
திருவாலி மாயனையே சேர்ந்து.

| | |
|---|---|
| அழன்று பொரு | சீறிச் சிவந்து (சுக்கிரீவனோடு) போர் செய்த |
| வாலி | —வாலி யென்னும் வானர வீரனுக்கு |
| காலன் | —மிருத்யுவானவனும் |
| பரகாலன் போற்றும் | திருமங்கையாழ்வார் பாடித் துதித்த |
| திரு ஆலி | —திருவாலி திருநகரியில் நிற்பவனுமான |
| மாயனையே சேர்ந்து | பெருமானையே சரணம் புகுந்ததனால் |
| கழன்று போம் வாயுவினை கட்டாமல் | ப்ராணாயாமம் முதலியன செய்யாமலும் |
| உழன்று போய் தீர்த்தம் ஆடாமல் | வருந்திப் பலவிடங்களிலுஞ் சென்று புண்ணியதீர்த்தங் களில் அவகாஹியாமலும் |
| உய்ந்தேன் | —உஜ்ஜீவிக்கப் பெற்றேன். |

* * * திருநகரியென்றும் திருவாலியென்றும் தனித்தனி இரண்டு திருப்பதிகள் காணப்படினும், திருமங்கையாழ்வார் சிறப்புப்பெற்று விளங்கும் தலமான திருநகரியே திருவாலி திருநகரியாம்

'கழன்றுபோம் வாயுவினைக் கட்டாமல்' என்றது பிராணாயாமம் செய்யாமல் என்றபடி. இது, ப்ராணாயாம பூர்வகமாகச் செய்யும் வைதிகானுட்டானங்கள் பலவற்றுக்கும் உபலக்ஷணமாகும். சிலர் வைதிகானுட்டானங்களைச் செய்து பேறு பெற விரும்புவர்கள்; சிலர் கங்கை யமுனை முதலிய புண்ணிய தீர்த்தங்களில் குடைந்தாடிப் பேறுபெற விரும்புவர்கள். ஐயங்கார்தாம் இவ்விரு வழிகளிலும் செல்லாது * உலகமேத்துங் கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லை யென்று மண்டினாருய்யலல்லால் மற்றையார்க்குய்யலாமே * என்கிற திருமங்கையாழ்வாருளிச்செயலின்படி திவ்யதேச அவகாஹனத்தினால் உஜ்ஜீவித்தபடியை இச் செய்யுளினால் உரைத்தாராயிற்று. .... .... ...

## ஸ்ரீ ராமாநுஜனன்பர்களுக்கு மீண்டு மறிவிப்பு.

அன்பர்களே! சென்ற இதழ் 250ல் முதல் மூன்று பக்கங்களை விசேஷித்து வரிவரியாக வாசிக்கவேணுமென்று நாம் கேட்டுக்கொண்டபடி பலரும் வாசித்தார்கள். வாசித்ததோடு நில்லாமல் நமது வேண்டுகோளைக் கூடியமட்டில் ஸபலமாக்கியும் வருகிறார்கள். அன்னவர்களின் பெயர்களை நாம் இச்சஞ்சிகையின் முடிவில் வெளியிடுவோம்.

முன்னிதழில் வெளிவந்த நமது அறிக்கையில் "ஸ்ரீ ராமாநுஜன் சந்தாதாரர்களென்று பேர் பெற்றவர்கள் அனைவரும் 25 ரூபாய்க்குக் குறைவில்லாமல் தங்கள் சக்தியுள்ளவளவும் நாளது ஸெப்டம்பர்மாத முடிவுக்குள் அனுப்பித்தர வேணும்" என்று கண்டிருக்கிறது. "அக்டோபர்மாத முடிவுக்குள்" என்றெழுத நினைத்துக் கைப்பிசகாக ஸெப்டம்பர்மீ முடிவுக்குள் என்று விழுந்திட்டது. இப்போது பலருடைய வேண்டுகோளுக்கிணங்கி "நவம்பர்மாத முடிவுக்குள்" என்று தெரிவிக்கிறோம். தவணை அதற்குமேலும் ஏறிக்கொண்டு செல்லாதென்பதை அவரவர்கள் நினைவிற் கொள்ளவேணும்.

சில அன்பர்கள் இன்ஸ்டால்மெண்டு ஸிஸ்டம் விரும்புகிறார்கள். அசக்தர்கள் விஷயத்தில் மட்டும் இந்த விருப்பத்தை ஏற்றுக்கொள்ளுகிறோம். தவணை தவறாமல் நடந்துகொள்ளவேணுமென்பதையும் நினைவூட்டுகிறோம்.

மிகச் சில அன்பர்கள் எழுதுவதாவது — தேஹயாத்திரை நடத்திக்கொள்வதே சிரமமாயிருக்கிறது; தொகைசெலுத்தாதவர்களுக்குப் பத்திரிகை கிடைக்காதென்பதைக் காண மனம் மிக வருந்துகின்றது. ஸ்ரீ ராமாநுஜனை யனுபவியாமல் இருக்கவும் மனமில்லை இது கிடைக்கும் நாளை எதிர்பார்த்திருப்பதும், கிடைத்தவுடனே எந்தகாரியத்தையும் விட்டுப் பன்முறையும் வாசிப்பதும், மறுபடியும் பத்ரிகை கிடைக்கும் நாளை எதிர்பார்த்திருப்பதுமாயிருக்கும் யாம் பத்ரிகையைப் பெறாமலிருக்கவும் முடியவில்லை. இப்படியாக ஊசலாடிக்கொண்டிருக்கிற எமது உள்ளத்திற்கு ஸ்வாமிகளே தேற்றரவு அளிக்கவேணும் — என்பதாக.

ஸ்ரீ ராமாநுஜனில் உண்மையாக இவ்வளவு ஆதரமுள்ள அன்பர்களுக்கு நாம் பத்திரிகைபை நிறுத்தமாட்டோம். தங்கள் அசக்தியையும் ஆர்வத்தையும் தெரிவித்துப் பத்திரிகையை விரும்புமவர்களுக்கு அனுப்பியேவருவோம். .... *

சென்ற இதழில் மூன்றாவது பக்கத்தில் ஓர் முக்கிய அறிவிப்பு என்ற தலைப்பின்கீழ் "இதுபற்றித் தனி விளம்பரம் பிரசுரிக்கப்படும்" என்று முடித்திருந்தோம். அதற்குப் போதுமான அவகாசம் கிடைக்கவில்லை. க்ரமப்ராப்தமான •மஹோத்ஸவம் 4—11—69 முதலாக எங்கும் நடைபெறும். அதனிடையே நாமுத்தேசித்த பணியை நிறைவேற்றுவோம். அச்சுப்பணிகள் செவ்வனே நடைபெற்று வருகின்றன. ... ... .... .... *

# யாதவப்ரகாசரும் எம்பெருமானாரும்

நம்முடைய குரு பரம்பராப்ரபாவம் முதலிய நூல்களில், ஸ்வாமி ராமானுஜர் யாதவப்ரகாசரிடம் வேதாந்நார்த்த ச்ரவணம் பண்ணினதாகச் சொல்லப்படும் இதிஹாஸத்தில் சிலர்க்குச் சில ஆசங்கைகள் தோன்றுகின்றனவாம். எங்ஙனே யென்னில்; (1) ஸ்வாமி இயற்கையிலேயே மிகச்சிறந்த ஸ்ரீ வைஷ்ணவோத்தமர் என்பது நிர்விவாதம். ஆளவந்தார் திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தவரான பெரிய திருமலை நம்பியின் ஸஹோதரீ புத்ரரான ஸ்வாமி ஆஜாநபாவநரென்பதில் யாருக்கும் விப்ரதிபத்தி யிருக்க நியாயமில்லை; அக்காலத்தில் ஆளவந்தார் சதுச் சாஸ்த்ர மஹாவித்வானும் ஸகலதர்சநார்த்த ப்ரவசந ஸமர்த்தராயு மெழுந் தருளியிருக்க, அவரிடத்திலே சென்று சேர்ந்து வேதாந்த ச்ரவணம் பண்ணலாமா யிருக்க, சாஸ்த்ர விருத்தமாக ஏகதண்டியாயும் முண்டித மஸ்தகராயும் யஜ்ஞோப வீத ரஹிதராயு மிருக்கிற வொரு விமதரிடத்திலே சென்று உபநிஷத்துக்களை அதிகரித்தது எதனாலே?

(2) யாதவ ப்ரகாசர்க்கு ஸ்வாமி எண்ணெய் தேய்த்ததாகச் சொல்லப்படு கிறது. மஹாஜ்ஞாநாதிகரான அவர் ஜ்ஞானத்துக்குத் தக்கபடி அனுஷ்டாந சீல ராயு மிருந்திருப்பரே; அவர் ஆச்ரம விருத்தமாக எண்ணெய் தேய்த்துக் கொள்ளு வாரா ? அப்படி அவர் எண்ணெய் தேய்த்துக் கொண்டாலும் அவருடைய இனத் தார்கள் பலரிருக்க அந்தத் தொழிலை ஸ்வாமி செய்வானேன் ?

(3) மேலும், வேதாந்தார்த்த விசாரணைக்கு அதுவா ஸமயம்? அரையில் காஷாயமு மின்றிக்கே கௌபீந மாத்ர மணிந்துகொண்டு எண்ணெயும் தலையுமா யிருக்கிற காலத்தில் வேதாந்தார்த்த விசாரத்திற்கு ஔசித்யமேது ?

(4) கப்யாஸ ச்ருதிக்கு யாதவ ப்ரகாசர் சொன்ன மர்க்கட ப்ருஷ்டப் பொருள் ஏற்கெனவே த்ரமிடாசார்யருடைய க்ரந்தத்திலிருக்கையாலே அதை அநுவதித்து யாதவர் சொல்லியிருந்தால் அதற்காக உஷ்ணோஷ்ணமான கண்ணீர் பெருக ப்ரஸக்தி யுண்டோ ? என்று இங்ஙனே சங்கைகளாம்.

## இந்த நான்கு சங்கைகளுக்கும் வரிசையாக விடையிறுப்போம்.

(1) ஆளவந்தார் சதுச்சாஸ்த்ரங்களிலும் அத்விதீய மஹாவித்வானும் ஸகலதர்சநார்த்த ப்ரவசந ப்ரவீணராயு மெழுந்தருளி யிருந்தாரென்பது வாஸ்த வம். இதில் யாதொரு விப்ரதிபத்தியு மில்லை. ஆனால் அவர் உத்தமாச்ரமியாகை யாலே குத்ருஷ்டிகளின் க்ரந்தங்களை ப்ரவசநம் செய்யத்தகாதென்று விட்டிட்ட வர். மேலும் ஸ்ரீ ராமானுஜருடைய இளமைப் பருவத்தில் அவர் மிகவும் வயோ வ்ருத்தராயிருந்தார். அவர் காஞ்சீபுரத்திற் கெழுந்தருளித் தேவப்பெருமாளு டைய திருமடைப்பள்ளி ப்ரதக்ஷிண வீதியிலே ஸ்வாமியை * ஆமுதல்வனிவ னென்று கடாக்ஷித்து அநுக்ரஹித்தருளுகிற காலத்திலே ஸ்வாமி மிகவும் இள வயதிலிருந்தவர் இப்படிப்பட்ட காரண விசேஷங்களினாலே ஸ்வாமி ஆளவந்தா ரிடம் அந்தேவாஸியாயிருக்க ப்ராப்தமாக வில்லை. யாதவப்ரகாசர் சிகாயஜ்ஞோப

வீதாதிகளை வர்ஜித்தவராயிருந்தாலும் அவர்களுடைய மதாசாரப்படிக்கு அது கிடக்கட்டுமென்று ஸ்வாமி அந்த வேஷத்திலே கண் செலுத்தாமலிருந்தார். அக்காலத்தில் மதத்வேஷமென்பது தலையெடுத்தாடாமலிருந்தது. மதத்வேஷம் மிகமிக முற்றின இக்காலத்திலுங் கூட மதபேதங்களையும் வேஷ வேற்றுமைகளையும் பாராமல் அவரவர்கள் யதேச்சமாக வித்பாக்ரஹணம் செய்து போருவதை எங்கும் காணுநின்றோம். முக்கியமாக, ஸ்வாமி யாதவப்ரகாசருடைய பாண்டித்ய ப்ரபாவங்களைக் கண்டு அவரைத் திருத்திப் பணிகொள்ள வேணுமென்கிற திருவுள்ளத்தை முதலிலேயே கொண்டு விட்டார். அதனாலேயே இரண்டு மூன்று தடவை அவரைவிட்டுத் தாம் விலகநேர்ந்துங்கூட அவரோடொட்டிக் கொண்டேயிருந்தார் யதிராஜஸப்ததியில் "ஸ்வபலாதுத்த்ருதயாதவ ப்ரகாச:" என்று அக்காலத்திலேயேஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருத்தலால், யாதவப்ரகாசரைஸ்வாமி திருத்திப் பணிகொண்ட கதை அவிச்வஸநீயமென்று இக்காலத்திலே சிலர் சொல்லுவது உண்மைக்கு மாறானது. அக்காலத்தில் யாதவர் ஸகலவிதத்திலும் மஹா ப்ரக்க்யாதரா யிருந்தவர். அவரை அடிமைப்படுத்திக் கொள்ளும் முகத்தால் ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்திற்கு மிக்க பெரும்புகழ் விளைக்கவேண்டியே ஸ்வாமி அவரை அநுவர்த்தித்திருந்தா ரென்பது தத்துவம். ஸ்வாமியின் ப்ரபாவமும் அவருடைய ஸம்பந்தத்தாலே மிகமிக விளங்கிற்று. எங்ஙனே யென்னில்;

ராஜபுத்ரியை ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸு நலிந்துகொண்டிருக்கையில் அதை யோட்டுவதற்காக யாதவர் சிஷ்யபரிவாரஸமேதராய் ராஜக்ருஹத்திற்குச் சென்றளவிலே அங்கு நடந்த கதை ஸுப்ரஸித்தமானது. "த்ரஸ்தோஹம் தவ ஸவிதோஷிதாதமுஷ்மாத் சேஷாம்சாஜ் ஜநமவிதும் க்ருதாவதாராத் * [திவ்ய ஸூரி சரிதே] என்று சொல்லிற்று ப்ரஹ்மரக்ஷஸ்ஸு. "யாதவா! உனக்கு நான் அஞ்சமாட்டேன்; இவ்வுலகை ரக்ஷிக்க ஆதிசேஷாம்சமாய்த் திருவவதரித்திருப்பவரும் உன்னருகே நிற்பவருமான ஸ்ரீ ராமாநுஜர்க்கே நான் அஞ்சுவன்" என்று சொல்லிற்று. விந்த்யாடவியிலிருந்து ஒரே ராத்ரியில் ஸத்யவ்ரத க்ஷேத்திரம் வந்து சேரும்படியான பெருமையும் யாதவப்ரகாசரோடு ஸம்பந்தித்திருந்த காலத்தில் வெளியாயிற்று. இவ்வாறு அனேக ப்ரபாவாதிசயங்கள் வெளியாவதற்குப் பாங்காகவும், இத்தகைய வைபவங்களைக் காட்டி யாதவரை யீடுபடுத்திக் கொள்வதற்காகவுமே ஸ்வாமி அவரை அநுவர்த்தித்திருந்தாரென்பது வஸ்துஸ்திதி.

(2) உத்தமாச்ரமியாய் அநுஷ்டாந சீலருமான யாதவர் எண்ணெய் தேய்த்துக் கொள்ளுகிற வழக்கம் வைத்துக்கொண்டிருப்பரா வென்கிற சங்கை மிகச் சிறிது. "சரீரமாத்யம் கலு தர்மஸாதநம்" ஆகையாலே உத்தமாச்ரமிகளும் சரீரரக்ஷணம் செய்து கொள்ள ப்ராப்தமாகிறது. நாட்டாரோடியல்வொழிந்து வநேசரர்களாயிருப்பார் அப்யஞ்ஜந — வபந — விரேசநாதிகளை விட்டிருந்தாலும் ஸம்ஸாரிகளினிடையே போது போக்குவார்க்கு அவை அநுவர்த்தநீயங்களாகிற படியைக் காணாநின்றோம். உபாத்யாயர்க்குக் கைங்கர்யம் செய்வதில் சிஷ்யர்களுக்குக் குதூஹலமிருப்பது ஸஹஜமாகையாலே, அப்யஞ்ஜநத்தை அவர்க்கு ஸ்வாமி செய்தாரென்பதில் விப்ரதிபத்தி தோன்ற விரகில்லை.

(3) அப்யஞ்ஜந காலத்தில் வேதாந்த ப்ரவசநம் நடந்ததாகவோ வேதாந்தார்த்த விசாரம் நடந்ததாகவோ யாரும் சொல்லவில்லை ப்ரஸக்தாநுப்ரஸக்தமான வார்த்தாலாபங்கள் எந்த ஸமயத்திலும் நேரலாம். ஏதோ வார்த்தையடைவில் எம்பெருமானுடைய திருக்கண்களைப் பற்றி யாதவர் ஹேயமாகச் சொல்லி யிருக்கிறரென்பது தெரியவருகிறது. 'பகவானுக்கு விக்ரஹமேகிடையாதென்றும், விக்ரஹ முள்ளதாகக் கொண்டாலும் அவனுக்கு மர்க்கட ப்ருஷ்டம் போன்ற கண்ணே யுள்ளதென்றும் ஏச்சான பேச்சு யாதவர் வாக்கில் வெளிவந்ததென்பதில் ஸந்தேஹமில்லை. அது கேட்டுப் பொறுத்திருக்க மாட்டாமையிைலேயே ஸ்வாமிக்கு உஷ்ணோஷ்ணமான கண்ணீர் பெருகிற்று.

(4) மர்க்கட ப்ருஷ்டப் பொருள் த்ரமிடாசார்யருடைய க்ரந்தத்திலுமிருந்தாலும் அங்கிருக்கிற விதம் வேறு; யாதவர் அதை அநுவதித்த விதம் வேறு. *மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்குக் கச்சொடு பட்டைக்கிழித்துக் காம்பு துகிலவை கீறி நிச்சலும் தீமைகள் செய்வாய்* என்று ஆழ்வார்கள் திருவாக்கில் வருமவையே சிசுபால ஸஹோதரர்களின் வாக்கில் வந்தால் அஸஹ்யமாகிறபடியை அநுபவத்தில் காணநின்றேமல்லவா?

## ப்ரஸங்காத் சிலபேசி முடிக்கிறேம்

ஸ்ரீசக்ரவர்த்தி திருமகன் பருவம் நிரம்பின பின்பு செய்த ஜடாயு மோக்ஷப்ரதாநத்திலே ஆக்ஷேப ஸமாதானங்கள் வர்த்தியா நின்றன; கண்ணபிரான் நான்கு பிராயத்திலே செய்த ததிபாண்ட மோக்ஷ ப்ரதாநத்திலே ஆக்ஷேபிப்பாருமில்லை, ஸமாதானம் சொல்லுவாருமில்லை. இதை நாம் காட்டுவதன் கருத்தை உய்த்துணர்க.

* பஞ்சாசார்ய பதாச்ரித:* என்று, ஐந்து ஆசார்யர்களிடத்திலே அர்த்தங்கள் கேட்டதாகச் சொல்லப்படுகிற எம்பெருமானர் உபநிஷத்துக்களின் அர்த்தங்களை ஓராசார்யரிடத்திலும் கேட்டதாகத் தெரிய வில்லையே யென்று சிலர் சொல்லுவதுண்டு 'வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே, வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷத் ராமாயணாத்மநா,'' என்கிறபடியே ஸாக்ஷாத் வேத ப்ராதுர்ப்பாவமான ஸ்ரீ ராமாயணத்திற்கும், வேதந் தமிழ் செய்த மாறன் சடகோபன் சொல்லாயிரத்திற்கும் பொருள் கேட்ட விடத்தில் வேதாந்தார்த்தங்கள் தவிர வேறு என்ன கேட்கலாகும்? 'ஆளவந்தார்க்கு ஏகலவ்யன் காணும் நான்'' என்றருளிச் செய்த எம்பெருமானர் எந்த ஆசார்யரிடத்திலும் எதுவும் கேட்டிருக்கத் தேவையில்லை யென்பது பரமார்த்தம். வேதாந்த தேசிக விரசித கீதாபாஷ்யதாத்பர்ய சந்த்ரிகையில் *யத்பதாம்போருஹ சலோக வியாக்கியானத்தில் 'ஆளவந்தார்க்கு நான் ஏகலவ்யன் என்று ஸ்வாமி ஸாதித்ததாக ஸ்பஷ்டமா யெழுதப்பட்டிருப்பதும் காண்க, ஆகவே "யஸ்ய தேவே பரா பக்திர் யதா தேவே ததா குரௌ. தஸ்யைதே அகதிதா ஹ்யர்த்தா: ப்ரகாசந்தே மஹாத்மந:" என்கிலருக்கில் சொன்னபடி ஆசார்ய பக்தி விசேஷத்தாலே ஸகலார்த்தங்களும்

ஸ்புரிக்கப் பெறுகிற உத்தமாதிகாரிகளுக்குள் அக்ரகண்யரான ஸ்வாமி உபநிஷத்துக்களின் ஸித்தாந்தப் பொருள்களை எந்த ஆசார்யரிடத்தில் க்ரஹித்தாரென்று கேட்பதுதானும் அநுசித மென்னக் குறையில்லை. சில ஆசார்யர்களின் பக்கலிலே சில கேட்டதாகச் சொல்லியிருப்பதும் லோகமர்யாதைக்குச் சேரவாமத்தனை. வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகள் ஸம்ஸ்க்ருதம் யாரிடத்தில் வாசித்தார்களென்றும், ஆழ்வார்கள் தமிழ் யாரிடத்தில் கற்றார்களென்றும் கேட்பது போன்ற கேள்விகளுக்குச் செவிகொடுப்பது தானும் அபசாரமாகும். ... *

---

## பூர்வாசார்ய வியாக்கியானங்களைப்பற்றி

திவ்வியப் பிரபந்தங்களுக்குப் பெரியவாச்சான்பிள்ளை முதலான பூருவாசாரியர்கள் அருளிச் செய்த வியாக்கியானங்கள் எங்கே கிடைக்குமென்று பலர் நமக்கு எழுதிக்கொண்டு வருகிறார்கள். அவர்களுக்கு பதில் தெரிவிக்கும் வியாஜத்தினால் அனைவருமறிய அறிவிக்கிறோமிங்கு.

திருவாய்மொழியாயிரத்திற்கு பகவத் விஷய ஸ்ரீ கோசம் ‘சே. கி. பதிப்பு'' என்பது [அதாவது, திருவல்லிக்கேணி சேட்லூர் கிருஷ்ணமாசார்யர் பதிப்பு] தென்னாட்டில் பெரும்பாலும் பரவியுள்ளது. அப்பதிப்பு இப்போது கிடைக்குமிடம் அறியோம். ஈடு முப்பத்தாறாயிரப்படிமட்டும் தமிழ் லிபியிலும் தெலுங்கு லிபியிலும் தனித்தனியே இரண்டு ஸம்புடமாக நாம் நமது ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபை மூலமாக நெடுநாள் முன்னமே வெளியிட்டிருக்கிறோம். பிரதிகள் கிடைக்கும்.

முதலாயிரத்தில் பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம் மட்டும் சில மாதங்களுக்கு முன்பு நாம் பதிப்பித்து வெளியிட்டிருக்கிறோம். நாச்சியார் திருமொழி முதற்கொண்டு பூர்த்தியாக, புத்தூர் அட்வகேட். ஸ்ரீ. உ. வே. S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் (ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிப) ஸ்வாமி பலவாண்டுகட்கு முன்பே வெளியிட்டுள்ளார். இவர் தாமே இயற்பாவிலும் பெரும்பாகம் வெளியிட்டுள்ளார். இவை அந்த ஸ்வாமியிடத்தில் கிடைக்கும்

பெரிய திருமொழி வியாக்கியானம் தமிழ்லிபியில் இப்போது கிடைப்பது அரிதாகவேயுள்ளது. ஏறக்குறைய 55 வருடங்களுக்கு முன்பு சென்னை ஸ்ரீவைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபையின் மூலமாக வெளிவந்த பதிப்பு பலவாண்டுகட்கு முன்னமே துர்லபமாய் விட்டது. அதை நாம் தெலுங்கு லிபியில் அச்சிட ஆரம்பித்து மந்தகதியாக நடத்திவந்ததில் ஏழு பத்துக்கள் வரையில் முடிந்து வெளிவந்துள்ளது. நாளடைவில் பூர்த்தியாகும்.

மணிப்ரவாள க்ரந்தங்களை வெறுந் தமிழ் லிபியில் அச்சிடுவதில் மிகவும் சிரமமுள்ளது. ஸம்ஸ்க்ருத ப்ரமாணவசனங்கள் தவிர ஸம்ஸ்க்ருத வாக்யங்களும் பஹுளமாயிருக்கையாலே. தெலுங்கு லிபியில் அச்சிட்டால் வாசிப்பதற்கெளிது. ஆனால் அந்த லிபியை வெறுப்பவர்களே அதிகம். பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகள் லோபமடையாமைக்கு ஒருவாறு அச்சிட்டு வைப்பது.

---

# ஐவர் குணநுபவர்.

இப்பத்திரிகை கார்த்திகை மாதத்ததாயினும் அன்பர்களால் ஐப்பசி மாதத்தில் அநுபவிக்கப்படுகின்றது. மாதங்களுள் ஐப்பசி மாதத்திற்கு நிகரான மாதம் ஐப்பசி மாதமேயாகும். இம்மாதம் வடமொழியில் துலாமாஸ மெனப்படும். துலா என்னும் வடசொல்லுக்கு ஒப்பு என்றும் திராசு என்றும் இரு பொருள்களுண்டு. ஒப்பு என்னும் பொருளில் ஒப்புத் தேடவேண்டிய மாதம் – ஒப்பற்ற மாதம் – என்பது கருத்தாகும். திராசு என்னும் பொருளில் ''உலகுமழிசையு முள்ளுணர்ந்து தம்மில் புலவர் புகழ்க்கோலால் தூக்க'' என்கிற திருச்சந்த விருத்தத்தனியன் படியே திராசிலிட்டு நிறுக்கவேண்டிய மாதம் என்பது கருத்தாகும். இரண்டு படியாலும் ஒப்பற்ற மாத மென்பதே தேறும்.

ஆழ்வார்களில் முதலாழ்வார்களென்று போற்றப் படுகிற பொய்கையார் பூதத்தார் பேயார் என்னும் ஆழ்வார்கள் மூவரும், ஆசாரியர்களில் நிகரற்றவர்களென்று புகழ்பெற்ற பிள்ளைலோகாசாரியரும் மணவாளமாமுனிகளும் ஆக ஐவர் திருவவதரித்த மாதமன்றோ ஐப்பசி மாதம். இவ் வைவரையும் அடைவே சிறிது அநுபவிக்க ஆசைகிளர்கின்றது. இவர்களின் திவ்ய ஸ்ரீ ஸூக்திகளில் ஏக தேசம் அநுபவிப்பதே இவர்களது குணநுபவமாகும்.

## 1. பொய்கையார் அநுபவம்.

முதல் திருவந்நாதியென வழங்கப்பெறும் நூறு பாசுர முள்ளதொரு திவ்யப்பிரபந்தம் இவர் தம்முடைய முதன்மையான அருளிச் செயலாகும். இதில் ஒரு பாசுரத்தை ஸாரமாக வெடுத்து அநுபவிப்போம். நான்காவது பாசுரத்தில் *நெறிவாசல் தானேயாய் நின்றானை* என்பது முதலடி. இப்பாசுரத்தில் ஒரு புராதன கதையை யருளிச் செய்கிறார். அதை அடுத்தபடியாக எடுத்துக் கொள்வோம். 'தேவோ நாமஸஹஸ்ரவாந்' என்றபடி பேராயிரமுடைய பெருமானுக்கு ஆழ்வார் சாத்துகிற விலக்ஷணமான திருநாமம் நெறிவாசல் தானேயாய் நின்றான் என்பது. நெறி யென்று மார்க்கத்தைச் சொல்லிற்றாய் உபாயம் என்றபடி. ஸாதன மென்பதும் உபாய மென்பதும் பர்யாயம் வாசல் என்றது புகுமிட மென்றபடியாய் உபேயத்தைச் சொல்லிற்றாகும் உபேய மென்பதும் ப்ராப்ய மென்பதும் ஸாத்ய மென்பதும் பர்யாயம். உலகில் ஒவ்வொருவர் ஒவ்வொன்றை உபேயமாகக் கொள்வர் [பேறாகக் கொள்வர்]; அதைப் பெறுதற்கு உபாயம் வேண்டியே யிருக்கும். உபாயமில்லாமல் உபேயம் கிடைக்காது. ஆகவே உபாயம் வேறாய் உபேயம் வேறாயிருப்பது பொதுவான போக்கு. எம்பெருமான் விஷயத்தில் மட்டும் இது விலக்ஷணமாயிருக்கும். அவனைப் பெறுதற்கு அவனே உபாயம். 'உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் ந து குணௌ'' என்ற பட்டருடைய ஸ்ரீ ஸூக்தி அற்புதமாய் அமைந்தது; எம்பெருமானுக்கு உபாயத்வமும் உபேயத்

வமும் குணங்களல்ல; ஸ்வரூபம்; (அதாவது) அஸாதாரண லக்ஷணம் என்றபடி. எம்பெருமானுக்கு என்ன லக்ஷணம்? என்று ஒருவர் கேட்டால், தானே உபாய மாயும் தானே உபேயமாயுமிருக்கை லக்ஷணம் என்று சொல்லிவிடலாம். இப்படிப் பட்ட வஸ்து வேறென்று இருப்பதாகக் காட்டமுடியாது. இவ்வதிசயத்தைப் பொய்கையாழ்வார் நெறிவாசல தானேயாய் நின்றான் என்று ஒரு திருநாமமாக்கிக் காட்டினார்.

இப்பாட்டில் கூறிய பழைய இதிஹாஸமாவது. "ஆலமர நீழல் அறம் நால்வர்க்கு அன்றுரைத்த ஆலமமர் கண்டத்தரன்"—விஷகண்டனென்று பேர் பெற்ற பரமசிவன் ஆலமரத்தின் நிழலிலே யிருந்துகொண்டு அகஸ்த்யர் புலஸ்த்யர் தக்ஷர் மார்க்கண்டேயர் என்கிற நால்வர்க்கு தர்மோபதேசம் செய் தனனும். இக் கதையைத் திருமழிசைப் பிரானும் தம்முடைய திருவந்தாதியில் "ஆல நிழற்கீழ் அறநெறியை நால்வர்க்கு,மேலையுகத் துரைத்தான் மெய்த்தவத் தோன்" என்ற பாசுரத்தினால் அருளிச் செய்தார். அது நிற்க; இக் கதையை இங்குப் பொய்கையாழ்வார் ஸாதிப்பது வெகு விலக்ஷணம். முன்னம் தானறிந் தன்றோ பிறர்க்கு உபதேசிக்கவேணும். பகவத் விஷயம் இவனுடைய அறிவுக்கு எட்டுமதன்றே என்பார்போன்று 'அரன் அறிவானும்' என்று ஏசும் முறையில் பேசுகிறார். அன்றியும், தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுதுமொத்த பகவத் விஷயத்தை அம்ருதகண்டன் அன்றோ பேசவேணும்; [ஆலமமர்கண்டத்தரன்] ஹாலாஹல மென்னும் விஷத்தைக் கழுத்திலே கொண்டுள்ள இவனா பேசுவது? என்று இதுவும் ஒரு ஏச்சு.

## 2. பூதத்தார் அநுபவம்

இவ்வாழ்வார் தமது திருவந்தாதியில் (16) *வனத்திடரை ஏரியாம் வண்ண மியற்றுமிது வல்லால், மாரி யார் பெய்கிற்பார் மற்று* என்று விலக்ஷணமான தொரு த்ருஷ்டாந்தம் காட்டியருளினர். மேடான நிலத்தை வெட்டிப் பள்ளமாக்கி விடலாமேயல்லது தண்ணீரையுண்டாக்க யாரால் முடியும்? என்பது இதன் கருத்து. ஒரு தெருவில் இரண்டு வீடுகள். ஒரு வீட்டு வாசலில் பள்ளமிருந்தது. அதில் மழைத் தண்ணீர் தேங்கி வீட்டுக்காரனுக்கு மிகவும் ஸௌகரியமளித்து வந்தது. மற்றொரு வீட்டு வாசலில் பள்ளமின்றிக்கே மேடு இருந்தபடியால் அங்குத் தண்ணீர் தேங்குவதற்கு அவகாசமில்லாமலிருந்தது. பள்ளம் வெட்டி விட்டால் நாமும் பக்கத்து வீட்டுக்காரன் போல் ஸௌகரியமடையலாமென் றெண்ணி மேட்டை வெட்டிப் பள்ளமாக்கினான். ஆனால் மழைபெய்யாமையினால் தண்ணீர் வரவில்லை. இதனை நெஞ்சில் ஊன்றி நோக்குவோமாயின் இதிலிருந்து ஒரு சாஸ்த்ரார்த்தம் கிடைக்கும். (அதாவது)—பள்ளம் வெட்டுதல் மழை பெய்வ தற்கு ஸாதனமன்று; 'நான் பள்ளம் வெட்டி விட்டேன் மழையே! நீ பெய்தாக வேணும்' என்று மேகத்தை வடிம்பிட முடியாதன்றோ. 'நாம் பள்ளம் வெட்டுவது மழைக்கு ஸாதனமன்றாகில், வீணான இச்செயலை எதற்காகச் செய்வது' என்று நினைக்கலாகாது; பள்ளம் வெட்டிவைத்தால் காலவிசேஷத்தில் தானாகப் பெய் கிற மழையை இது தாங்கிக் கொள்ள ஹேதுவாகும்.

இது போல, நாம் சேதனராகப் பிறந்துள்ள வாசிக்காக நம்முடைய நிலைமையைச் சீர்படுத்திக் கொள்வோம். இது பகவத் க்ருபைக்கு ஸாதனமாகமாட்டாது. ஒருகால் பகவான் நம் மீது அருள் வெள்ளத்தைப் பெருக்கத் திருவுள்ளம் பற்ற நேர்ந்தால் அந்த விஷயீகாரம் நம்மிடத்தில் நன்கு தங்குவதற்குப் பாங்காகு மத்தனை—என்பதாம். திருத்தமுருத சேதனரை மேட்டு நிலத்தின் ஸ்தானத்திலே கொள்க. அத்வேஷாதிகளாலே தம் நெஞ்சைத் திருத்திக் கொள்வதை ஏரியாம் வண்ணமியற்றுவதாகக் கொள்க. நிர்ஹேதுக பகவத் ப்ராப்தி கைபுகுதலை மாரி பெய்கையாகக் கொள்க. .... .... .... .... *

## 3. பேயார் அநுபவம்

இவ்வாழ்வாருடைய திருவந்தாதியில் (17.) *சென்ற நாள் செல்லாத செங்கண்மாலெங்கண்மால், என்ற நாள் எந்நாளும் நாளாகும்* என்றுள்ள பாசுரம் நிச்சலும் சிந்திக்கத்தக்கது. மேலெடுத்த பாசுரத்தின் பரமதாற்பரியமென்னவென்ருல், ஒருவனுக்கு நிகழ்காலமொன்று நல்லதாகச் செல்லுமாளுல் அவன் இறந்த காலத்தைப்பற்றியும் எதிர் காலத்தைப்பற்றியும் கவலை கொள்ள வேண்டா என்பதே. சென்ற நாள்—செல்லாத நாள்—செங்கண்மாலெங்கள்மால் என்ற (நிகழும்) நாள்—ஆக முக்கால நாட்களும் நல்ல நாட்களே என்பதாகப் பாசுரத்தின் பொருள். செங்கண்மால் எங்கள்மால் என்ற நாளாவது—எம்பெருமானை யநுபவிக்கும் நாள். அந்த நாளொன்று வாய்க்குமாளுல், சென்ற நாள் நன்ளுளேயாம்—பகவதநுபவமில்லாமல் பழுதேகழிந்தநாளும் நன்ளுளேயாமென்கை. எப்படி யென்னில்; அந்த நாள் கழிந்து போனதளுலேயே. இன்று வயிருரவுண்டவன் கீழே பட்டினிகிடந்து பசியால் வருந்தின நாளை நினைத்து வருந்த வேண்டாவே. அதே போல, மேல் வரப்போகும் நாளை நினைத்தும் வருந்த வேண்டா. இன்று செல்வம் படைத்தவன் நாளைக்கு நாம் செல்வமிழந்து தரித்ரளுய் விடுவோமோ வென்று நினைத்திடாமல் எப்போதும் இப்படியே யிருப்போமென்று நினைத்து மகிழ்ந்திருப்பதுபோல, இன்று பகவதநுபவம் செய்பவன் இப்படியே நமக்கு நித்யமாய்ச் செல்லுமென்று மகிழ்ந்திருக்கவேண்டும். ஆக, ஒருவனுக்கு நிகழ்கால மொன்றுமட்டும் நன்ருயிருந்துவிட்டால் அவனுக்கு இறந்த காலமும் எதிர் காலமும் நன்றேயென்றதாயிற்று.

## 4. பிள்ளைலோகாசார்யரனுபவம்.

பிள்ளைலோகாசார்யருடைய தனியனில் "ஸம்ஸார போகி ஸந்தஷ்ட ஜீவ ஜீவாதவே" என்றது மிகப் பொருத்தமான விசேஷணம். பாம்பு கடித்துத் துடிக்குமவனை விஷவைத்யன் பிழைப்பூட்டுமா போலே ஸம்ஸார ஸர்ப்பதஷ்டர்களைத் தமது திவ்ய ஸ்ரீஸூக்திகளினுல் உஜ்ஜீவிப்பித்தருளினவர் பிள்ளைலோகாசார்யர். இவருடைய திருவாக்குக்களான அஷ்டாதசரஹஸ்யங்களில் ஸ்ரீவசன பூஷணம் தத்வத்ரயம் முமுக்ஷுப்படி என்ற மூன்று ரஹஸ்யங்கள் ஸாரதமங்களாகக் கொள்ளப்பட்டு விளங்குகின்றன, இம் மூன்றையுமே மணவாள மாமுனிகள் வியாக்கியானித்தருளி விசதவாக்சிகாமணி யென்றுவிருது பெற்றனர்.

இவற்றில் தத்வத்ரயத்தில் ஈச்வர ப்ரகரணத்திலுள்ள (151) ஒரு சூர்ணையை மட்டும் ஈண்டெடுத்துக் காட்டி அதன் அரும்பெரும் பொருளை யநுபவிப்போம்

**151.** ஸர்வேச்வரன் கீழேவிவரித்த திருக்குணங்களோடு கூடினவனுகையாலே அடியார்பக்கலில் பரிமாறிப்போரும்படிகளைப் பரக்கப் பேசுகிறது. இந்தசூர்ணிகை. பிறர் நோவுபடக் 'கண்டால் காருணிகனுகையாலே ஐயோவென்றீடுபட்டிருப்பன்; ஸௌஹார்த்தவானுகையாலே ஆச்ரிதர்கள் அறிந்த காலத்தோடு அறியாத காலத்தோடு வாசியற எல்லாக் காலத்திலும் அவர்களுக்கு ஸகலவிதமங்களங்களையும் ஆசம்ஸிப்பவனுயிருப்பன்;

(மூலம்) 151. இப்படி, ஈச்வரன் கல்யாண குணங்களோடே கூடியிருக்கையாலே, பிறர்நோவுகண்டால், ஐயோ! என்றிரங்கி, அவர்களுக் கெப்போதுமொக்க நன்மையைச் சிந்தித்து. தனக்கேயாயிருத்தல், தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருத்தல் செய்யாதே. நிலாத்தென்றல் சந்தநம் தண்ணீர்போலே பிறர்க்கேயாய், தன்னையாச்ரயித்தவர்கள் பக்கல் ஜந்மஜ்ஞாநவ்ருத்தங்களாலுண்டான நிகர்ஷம் பாராதே, தாங்களும் பிறரும் தஞ்சமல்லாதபோது தான் தஞ்சமாய், ஸாந்தீபிநி புத்ரனையும், வைதிகன் புத்ரர்களையும் மீட்டுக்கொண்டு வந்தாப்போலே அரியன செய்தும். அவர்களபேக்ஷிதங்களைத் தலைக்கட்டியும். அவர்களுக்கு த்ருவபதம் போலே பண்டில்லாதவற்றையு முண்டாக்கியும், தந்தாம் ஸ்வம் தாந்தாம் விநியோகம் கொண்டாப்போலேயிருக்க தன்னையும் தன்னுடைமையையும் வழங்கி, அவர்கள் கார்யம் தலைக்கட்டினுல் தான் க்ருதக்ருத்யனுய், தான் செய்தநன்மைகளொன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸுக்ருத லவத்தையே நினைத்து, அநாதிகாலம் வாஸிதங்களான ரஸங்களை மறக்கும்படி யெல்லா தசையிலும் இனியனுய், பார்யா புத்ரர்கள் குற்றங்களைக் காணுக் கண்ணிட்டிருக்கும் புருஷனைப்போலே; அவர்கள் குற்றங்களைத் திருவுள்ளத்தால் நினையாதே, குற்றங்களைப் பெரியபிராட்டியார் காட்டினுலும் அவளோடே மறுதலைத்துத் திண்ணியனுய் நின்று ரக்ஷித்து, காமிநியுடைய அழுக்கு உகக்கும் காமுகனைப்போலே அவர்கள் தோஷங்களை போக்யமாகக் கொண்டு அவர்கள்பக்கல் கரண த்ரயத்தாலும் செவ்வியனுய், பிரிந்தால் அவர்கள் வ்யஸநம் குளப்படியென்னும்படி தானீடுபட்டு அவர்களுக்குப் பாங்காகத் தன்னைத் தாழவிட்டு அவர்களுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படி யெளியனுய், அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி முன்னணைக் கன்றையும் புல்லிட வந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலு மேற்குமாபோலே பெரியபிராட்டியாரையும் ஸூரிகளையும்விட்டு ஸ்நேஹித்துக்கொண்டுபோரும்.

ஆச்ரித பரதந்த்ரனுகையாலே நிலாத்தென்றல் சந்தனம் தண்ணீர் முதலான அசேதநப் பொருள்களைப் போலே, தனக்கேயாயிருப்பதும் தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருப்பதுமன்றிக்கே பிறர்க்கேயா யிருப்பன்;

ஸாம்ய குணயுக்தனுகையாலே அடியார்கள் திறத்தில் பிறப்பு அறிவு நடத்தை முதலியவற்றாலுண்டான தண்மை பாராமல் பரிமாறுவன்;

அசரண்யசரண்யனுகையாலே 'தாங்களும் தங்களுக்கு ரக்ஷகரன்று, பிறரும் தங்களுக்கு ரக்ஷகரன்று, என்று அறுதியிட்ட நிலைமையில் 'பற்றிலார் பற்ற நின்றானே!' என்கிறபடியே தான் ரக்ஷகனுயிருப்பன்;

ஸத்ய காமனுகையாலே *மாதவத்தோன்புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை* என்கிறபடியே நெடுங்காலத்திலே கடல் கொண்டுபோன ஸாந்தீபநி புத்ரனையும். *பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும்* என்கிறபடியே ஜனித்தபோதே பெற்ற தாயும் காணப்பெருதபடி நாய்ச்சிமார் தங்கள் ஸ்வாதந்த்ரியத்தாலே அழைப்பிக்கக் கைதப்பிப்போய் *சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியிலே கிடந்த வைதிகன் பிள்ளைகளையும் அவ்வவருபங்க

ளோடே மீட்டுக்கொண்டு வந்து கொடுத்தாப்போலே அரியன செய்தும் அடியார் விரும்பினவற்றைத் தலைக்கட்டுவன்;

ஸத்ய ஸங்கல்பனாகையாலே, உத்தாநபாத புத்ரனான த்ருவனுக்கு ஸ்வர்க்க லோகத்தினுடைய மேலெல்லையிலே அபூர்வமாயிருப்பதொரு ஸ்தானத்தைக் கல்பித்துக் கொடுத்தாப்போலே அடியார்களுக்கு முன்பில்லாதவற்றையு முண்டாக்கிக் கொடுப்பன்; இது அபூர்வ போக்யங்களை ஸ்ருஷ்டிக்க வல்ல அமோகஸங்கல்பனாகையாலே.

[தந்தாம் ஸ்வம் தாந்தாம் விநியோகம் கொண்டாப்போலே யிருக்கத் தன்னையும் தன்னுடைமையையும் வழங்கி] தங்கள் தங்கள் உடமையைத் தாங்கள் தாங்கள் எடுத்து விநியோகம் கொள்ளுமாபோலே கொள்ளலாம்படி ஆத்மாத்மீயங்களைக் கொடுத்தருள்வன். இது ஔதார்ய குணத்தின் காரியம்.

[அவர்கள் காரியம் தலைக்கட்டினால் தான் க்ருதக்ருத்யனாய்] அடியார்களின் காரியம் நிறைவேறினால் அவர்கள் க்ருதக்ருத்யராகையன்றிக்கே தான் க்ருதக்ருத்யனானதாக அபிமானிப்பன்; இது 'க்ருதீ' என்னும் குணத்தின் காரியம்.

[தான் செய்த நன்மைகளில் ஒன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸுக்ருதலவத்தையே நினைத்து.] தன் பக்கலிலே 'சரணம்' என்கிற உக்திமாத்ரமாகிற ஸுக்ருதலேசத்தைப்பண்ணினால் அவர்களுக்குத்தான் எல்லா நன்மைகளும் செய்தாலுங்கூட அவற்றை ஒன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸுக்ருத லவத்தையே நினைத்திருப்பன். இது க்ருதஜ்ஞதா கார்யம்.

[அநாதிகாலம் வாஸிதங்களான ரஸங்களை மறக்கும்படி எல்லா தசையிலும் இனியனாய்] நெடுங்காலமே பிடித்துக் கொளுந்திக்கிடக்கிற ப்ராக்ருத விஷயரஸங்களை அறவே மறக்கும்படி ஸர்வாவஸ்தையிலும் இனியனாயிருப்பன். இது மாதுர்யமென்னும் குணத்தின் காரியம்.

[பார்யா புத்ரர்கள் குற்றங்களைக் காணக்கண்ணிட்டிருக்கும் புருஷனைப் போலே அவர்கள் குற்றங்களைத் திருவுள்ளத்தால் நினையாதே] மக்கள் மனைவியருடனே கூடிவர்த்திப்பானொரு புருஷன் அவர்கள் செய்கிற குற்றங்களைக் கண்டிருக்கச்செய்தேயும் காணாதாரைப் போலேயிருக்குமாபோலே அடியார்கள் செய்த குற்றங்களைக் கண்டிருக்கச்செய்தேயும் திருவுள்ளத்தால் நினையாதிருப்பன். இது சாதுர்ய காரியம். அடியார்களின் குற்றங்களைத் தெரியாதபடி மறைக்க வல்லவனாகையே சாதுர்யம்.

[குற்றங்களைப் பெரிய பிராட்டியார் காட்டினாலும் அவளோடே மறுதலைத்துத் திண்ணியனாய் நின்று ரக்ஷித்து] சொன்னது செய்யவேண்டும்படி தனக்கு அபிமதையாய் சேதநர் குற்றங்களைப் பொறுப்பித்துச் சேரவிடுமவளான பெரிய பிராட்டி *தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்* என்கிறபடியே குற்றங்களைக் காட்டினாலும் *என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்* என்று அவளோடே மறுதலைத்து நிலைகுலையாதே நின்று ரக்ஷிப்பன். இது ஸ்தைர்யமென்னும் குணத்தின் கார்யம்.

[அவர்கள் பக்கல் கரணத்ரயத்தாலும் செவ்வியனாய்] மனமொழி மெய்கள் மூன்றிலும் செவ்வைக் கேடராயிருக்குமவர்கள் திறத்தில், நீர் ஏறாத மேடு நிலங்களிலே விரகாலே நீரேற்றுவாரைப்போலே தன்னை அமைத்து த்ரிகரணங்களாலும் செவ்வியனாய்ப் போருவன். இது ஆர்ஜவமென்னும் குணத்தின் காரியம்.

[பிரிந்தால் அவர்கள் வ்யஸநம் குளப்படி யென்னும்படி தானீடுபட்டு] *ஊர்த்வம் மாஸாந் ந ஜீவிஷ்யே* என்றால் *நஜீவேயம் க்ஷணமபி* என்கிறபடியே, தன்னைப் பிரிந்தால் அடியார்படும் வ்யஸனமானது, கடல்போன்ற தன் வ்யஸனத்துக்கு ஒரு குளப்படி மாத்திரமென்னும்படி தான் கிலேசப்படுவன். இது மார்தவமென்னும் குணத்தின் காரியம்.

[அவர்களுக்குப் பாங்காகத் தன்னைத் தாழ விட்டு] பிறவி அறிவு முதலானவற்றால் தண்ணியராயிருக்குமவர்களுக்கு அநுகூலமாக ஸர்வோத்க்ருஷ்டனான தன்னைத் தாழவிடுவன். இது ஸௌசீல்ய குணத்தின் காரியம்.

[அவர்களுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படி எளியனாய்] அவதார தசையிலே நவநீத சௌர்ய வ்யாஜத்தாலே *ஓர் நெடுங்கயிற்றால் ஊரார்களெல்லாருங் காண வுரலோடே தீராவெகுளியளாய்ச் சிக்கன ஆர்த்து அடிப்ப* என்கிறபடியே யசோதாதிகளுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படி எளியனாயிருப்பன். இது ஸௌலப்ய கார்யம்.

[அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி முன்னணைக் கன்றையும் புல்லிடவந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலும் ஏற்குமா போலே பெரிய பிராட்டியாரையும் ஸூரிகளையும் விட்டு ஸ்நேஹித்துக்கொண்டு போரும்.] அன்று தான் பெற்ற கன்றுக்குத் தாயான பசுவிரங்கி, முன்பு தான் ஸ்நேஹித்துக்கொண்டு போந்த முன்னணைக் கன்றையும், தனக்கு போக்யமான புல்லை யிடவந்தவர்களையுங்கூட மூசிக் கொம்பிலே கோத்தெடுப்பது குளம்பாலே மிதிப்பதாமாபோலே வல்லபையான பெரியபிராட்டியாரையும், முன்பு ஸ்நேஹ விஷயமாய்ப் போந்த நித்யஸூரிகளையும் தள்ளிவிட்டு இன்று ஆச்ரயித்தவர்களை ஸ்நேஹித்துக்கொண்டு போருவன். இது வாத்ஸல்ய கார்யம். ... .... .... *

பிள்ளை லோகாசாரியர் திருவடிகளே சரணம்.

## 5. மணவாளமாமுனிகளநுபவம்.

மணவாள மாமுனிகளுக்கு யதிவரபுநரவதார பூதரென்னும் ப்ரஸித்தி தொன்று தொட்டு விளங்கி வருகின்றது. எம்பெருமானாரே மீண்டும் மணவாள மாமுனிகளாகத் திருவவதரித் தருளினரென்றபடி. ''ஏராருமெதிராசரென வுதித்தான்வாழியே'' என்று உலகம் வாழ்த்துகின்றது. இதற்குரிய உபபத்திகள் பலவுண்டு. அவற்றை அடைவே விளக்குகின்றேன்.

1. பெரும்பாலும் வியாக்கியானங்க ளருளிச் செய்வதிலேயே ஊக்கம் எம்பெருமானார்க்கும் மாமுனிகளுக்குமொக்கும்; ஸ்ரீபாஷ்யம் வேதாந்த தீபஸாரங்கள், கீதாபாஷ்யம் என்னு மிவை வியாக்கியான க்ரந்தங்களே யன்றோ. மாமுனி

களின் வியாக்கியான க்ரந்தங்களும் ப்ரஸித்தங்கள். வேதார்த்த ஸங்க்ரஹம் கத்யத்ரயம்-என்று சில மூலக்ரந்தங்களும் ஸ்வாமி ஸாதித்தது போலே மாமுனிகளும் யதிராஜ விம்சதி உபதேசரத்தினமாலை முதலிய மூலக்ரந்தங்களு மருளிச் செய்தது ப்ரஸித்தம்.

2. அஸ்தாநே நிந்தாபரிஹாஸங்களை நிரப்பி நூல்களெழுதுவாருமுளரே; அங்ஙனம் நிந்தையையோ பரிஹாஸத்தையோ அணுவளவும் புகவிடாமல் பரமபவித்திர ஸ்ரீஸூக்திகளையருளுந்தன்மை ஸ்வாமிக்கும் மாமுனிகளுக்குமே யொக்கும்.

3. தொட்ட தொட்ட விடமெங்கும் பலபல சாஸ்த்ரார்த்தத் திரள்களே மலிந்த ஸ்ரீஸூக்திகளினுலே பண்டிதர்களின் உள்ளத்தை உகப்பிக்குந்தன்மை ஸ்வாமிக்கும் மாமுனிகளுக்குமே யொக்கும்.

4. எம்பெருமானுர் ஸ்ரீபாஷ்யம் தொடங்கும்போதே "பகவத் போதாயநக்ருதாம் விஸ்தீர்ணும் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு:, தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே" என்றருளிச் செய்து பூர்வாசார்ய ஸூக்திகளில் தமக்குள்ள அபிநிவேசாதிசயத்தை விளங்கக் காட்டியருளினர். மாமுனிகளும் *முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டு* *முன்னவராம் நங்குரவர் மொழிகள் உள்ளப் பெற்றோம் முழுதும் நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்* இத்யாதிகளாலே தமக்குள்ள பூர்வாசார்ய ஸூக்தி பஹுமானத்தைக் காட்டியருளினதோடு நில்லாமல் தம்முடைய வியாக்கியான க்ரந்தங்களைப் பூர்வாசார்ய ஸூக்திமயமாகவே அவதரிப்பித்தருளினர்.

5. ஸ்வாமியின் வாழி திருநாமத்திலே *மாறனுரை செய்த தமிழ் மறை வளர்த்தோன் வாழியே* என்று ஓதாநின்றோம். *ஆய்ந்த பெருஞ்சீரார் சடகோபன் செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராத வுள்ளம்பெற—ஏய்ந்த பெருங் கீர்த்தி யிராமானுச முனிதன் வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்* என்று அக்காலத்து சிஷ்யவர்க்கங்கள் பணிக்கக் காணுநின்றோம். இதுபற்றி மாமுனிகள் திறத்திலே சொல்லவேணுமோ? *சேற்றுக் கமல வயல் சூழரங்கர் தம் சீர் தழைப்பப் போற்றித்தொழு நல்லவந்தணர்வாழ விப்பூதலத்தே, மாற்றற்ற செம்பொன் மணவாளமாமுனி வந்திலனேல், ஆற்றில் கரைத்த புளியல்லவோ தமிழாரணமே* என்ற வொரு பாசுரம் போதுமே.

6. ஸ்வாமி எழுபத்து நான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளை ஸ்தாபித்தருளி அவர்கள் வழியாக தர்சந நிர்வாஹம் செய்தருள்வது ஸுப்ரஸித்தம் *லக்ஷ்மீநாதாக்க்ய ஸிந்தெள சடரிபுஜலத:* இத்யாதி ச்லோக ரத்னத்தினுலும்; இது ஸுவ்யக்தம். மாமுனிகளும் "திரமாக திக்கஜங்களிட்டருளும் பெருமாள்" என்கிற படியே அஷ்ட திக்கஜாசாரியர்களை ஸ்தாபித்தருளி அவர்கள் வழியாக தர்சந நிர்வாஹம் செய்தருள்வது நாடு நகரமும் நன்கறிந்தது.

7. *மன்னியதென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடு நாள்* என்றும், *ஸ்ரீரங்கம் கரிசைல மஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலெள........ஸ்ரீரங்கேச ஜயத்வஜோ விஜயதே ராமாநுஜோயம் முநி;* என்றும் சொல்லுகிறபடியே ஸ்வாமி ஸகல திவ்ய தேசங்களிலும் அபிமானம் காட்டியருளினவர், மாமுனிகளும் *அடைவுடனே திருப்பதிகள் நடந்தவேர்வையாறவோ* என்கிறபடியே திவ்யதேச யாத்திரைகள் செய்தருளி அவற்றில் அபிமானம் காட்டியருளினபடி ஸுப்ரஸித்தம். திவ்ய தேச ச்ரேணியில் சேராதிருந்த ஸ்தலத்தை திவ்யதேசமாக அபிமானித்தலுமாம். ஸ்வாமி திருநாராயணபுரத்திற்கு *ஒரு நாயகமாய்* என்கிற திருவாய்மொழியை ஸமர்ப்பித்து அத் தலத்தை திவ்யதேசமாக அபிமாநித் தருளினதும், மாமுனிகள் ராஜமன்னர் ஸன்னிதிக்கு *தீர்ப்பாரையாமினி* என்கிற திருவாய்மொழியை ஸமர்ப்பித்து அப்பதியை திவ்யதேசமாக அபிமானித் தருளினதும் அநுஸந்தேயம். [*வண்துவராபதிமன்னனை.*]

8. ஸ்வாமி சேஷாவதாரமென்பது ஸுப்ரஸித்தம். கருடவாஹன பண்டிதர் பணித்த திவ்யஸூரி சரிதத்திலும், வடுகநம்பி பணித்த யதிராஜ வைபவத்திலும் மற்றும்பல பிரபந்தங்களிலும் இது விசதம். மாமுனிகள், வரவரமுநி சதகத்திலே *துக்தோதந்வத்தவளமதுரம் சுத்தஸத்வைகரூபம் ரூபம் யஸ்ய ஸ்புடயதி தராம் யம் பணீந்த்ராவதாரம்'' என்றருளிச்செய்தபடியும், மற்றும் சரித்ரப்ரஸித்தியின்படியும் திருவனந்தாழ்வான் திருவவதார பூதரென்பது ஸுவ்யக்தம்

9. ஸ்வாமியெம்பெருமானார் * தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே* என்று எண்டிசையும் வாழ்த்துகிறபடியும், கோயிலொழுகு முதலானவற்றில் காண்கிற இதிஹாஸ விஸ்தாரப்படியும் ஸ்ரீரங்கஸ்ரீயை வளர்த்தருளினவரென்பது விச்வவிதிதம். மணவாள மாமுனிகள்திறத்தும்இங்ஙனேயன்றோ? ''அரங்கநகர்வாழ இன்னுமொரு நூற்றாண்டிரும்'' என்றன்றோ நிச்சலும் வாழ்த்துகின்றதுலகம்.

ஆக இவ்வொன்பது படிகளாலே எம்பெருமானாரும் மணவாள மாமுனிகளும் ஒற்றுமை பெற்றவர்களாவர். இவ்வொற்றுமைகளில், 1. 2. 3, லக்கமிட்ட நிரூபணங்கள் மூன்றும் மிகப்பொருத்தமானவை. இவைமூன்றும் இவ்விருவர்க்கே அஸாதாரணமானவை. ... .... ... ... *

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமல்லோககுரவே நம:

## திருவல்லிக்கேணி ஸ்ரீ. உ. வே. பிள்ளைலோகம் ஸ்தலசயனத் துறைவாரின் கடிதம்.

சென்னை ராயப்பேட்டையிலுள்ள ஸ்ரீ ராமநாதகோயங்கா எஸ்டேட்டில் 12—9—69 முதல் 29—9—69 வரை ஒன்பது நாட்கள் ஸ்ரீராமாயண திவ்ய மஹோத்வஸம் சிறப்பாக நடைபெற்றது. 108 வித்வான்கள் இம்மஹோத்ஸவத்தில் அந்வயித்து ஸ்ரீ ராமாயணம் ஸேவித்தார்கள். பட்டாபிஷேக நன்னாளன்று அனைவரும் (ஒரே குரலில்) பட்டாபிஷேகஸர்கம் ஸேவித்த அழகு வாசாமகோசரம். ஒவ்வொருவருக்கும் 101 ரூபாய் ஸம்பாவனையும், வஸ்திரங்களையும்

கொடுத்துக் கௌரவித்தனர். கோயில் திருமலை பெருமாள்கோவில் ஸ்ரீபெரும்பூதூர் திருவல்லிக்கேணி முதலிய திவ்ய தேசங்களில் வாழும் பெரியோர்கள் இம் மஹோத்ஸவத்தில் கலந்து கொண்டது பெருமகிழ்ச்சிக்கு உரிய விஷயமாகும். பிரம்மஸ்ரீ ராஜகோபால அய்யர் உறுதுணையாக இருந்து இம் மஹோத்ஸவத்தை நடத்திக் கொடுத்தார். ஸ்வாமியின் தாஸனுகிய அடியேனும் இதற்குச் சிறிது உடலுழைப்பைத் தந்தேன். ... ... ... ... *

---

## ஸ்ரீமதுபயவே. கோமடம். சடகோபாசர்யஸ்வாமி.

மணவாள மாமுனிகளின் திருவம்சத்தவர்கள் ஸ்ரீ ரங்கத்திலும் மதுரை ப்ராந்தங்களிலும் விளங்கி வருகிருர்கள். இங்கே ஸேவைஸாதித்தருள்பவர் ஸ்ரீவைகுண்டவாஸியான சடகோபாசார்ய ஸ்வாமியென்று திருநாமமுடையவர். நம்பிள்ளை ஸ்வாமியென்றே இவர் வழங்கப்பட்டு வந்தார்.



ஞானமனுட்டானமிவை நன்ருகவேயுடையராய் பகவத்விஷயரஹஸ்யாதி ப்ரவசனம் செய்துகொண்டு எழுந்தருளி யிருந்தார். இந்த ஸ்வாமியை அடியேன் நாற்பது ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு ஒருவிசை ஸ்ரீவில்லிபுத்தூரில் ஸேவிக்க ப்ராப்தமாயிற்று. அங்கே ஸ்ரீமத் பரமஹம்ஸ. திருமெய்யம் ஜீயர்ஸ்வாமியென்று ப்ரஸித்தராய் உபயவேதாந்த நிர்வாஹகராய் எழுந்தருளியிருந்த ஸ்வாமிஸன்னிதியிலே இவர்க்கு காலக்ஷேபம் நடைபெற்றது. ம்ருது மதுரபாஷியான இந்த ஸ்வாமியின் திருவுருவப்படம் இபபோது ப்ராப்தமாயிற்று. இந்த ஸ்வாமியின் திருக்குமாரரான ஸ்ரீமான் கோமடம் ராமாநுஜாசாரியர் இதனை யுபகரித்தார். .... *

---

## ப்ரமாணத்திரட்டின் பதிப்பு

ஸ்ரீ ராமாநுஜனின் சென்ற விதழில், நாம் மணவாளமாமுனிகளின் அறுநூருண்டு பூர்த்தி நினைவுமலராகப் பலநூல்களை வெளியிட விருப்பங்கொண்டிருப்பதைப் பிரசுரஞ்செய்திருந்ததுகண்ட பல ஆப்தர்கள் பிரமாணத்திரட்டு வெளியிடவேண்டியது மிகமுக்கியமென்று தெரிவிக்கிருர்கள். அதாவது, நம்முடைய ஸம்பிரதாய க்ரந்தங்களில் பூர்வாசாரியர்களால் மேற்கோளாக எடுத்தாளப்பட்டுள்ள இதிஹாஸபுராணுதி ஸம்ஸ்க்ருத வசனங்களுக்குப் பூர்ண சரீரத்தையெழுதி ஆகரங்காட்டிக் கருத்தையு மெழுதி வெளியிடவேணுமென்பதாம். உண்மையில் இது மிகவும் அவசியமானகாரியமென்பதை இசைந்து

கொள்ளுகிறோம். இது பலர் கூடிச்செய்யவேண்டிய காரியமேயல்லது ஏகாகியாய்ச்செய்து தலைக்கட்டக்கூடிய காரியமன்று.

ஆழ்வார் "யானுமென்னெஞ்சு மிசைந்தொழிந்தோம்" என்றாப்போலே அடியேனுக்குத் துணை அடியேனுடைய நெஞ்சுதான். அடியேனுடைய ஜ்யேஷ்ட ஜாமாதாவான ஸ்ரீமதுபயவே, வித்வான், அக்காரக்கனி ஸம்பத் குமாராசார்ய ஸ்வாமி துணைசெய்து வருவதுண்டு. இன்னும் பலதுணைவர்களை ப்ரதீக்ஷிக்க வேண்டியிருக்கின்றதிப்போது.

ப்ரக்ருதம் ப்ரமாணத்திரட்டு வெளியீட்டைப்பற்றி விஜ்ஞாபிக்கிறேன். திவ்யப்ரபந்த வியாக்கியானங்களும் ரஹஸ்ய வியாக்கியானங்களுமானவற்றில் உதாஹரிக்கப்பட்டுள்ள ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்கள் ஏறக்குறைய நாலாயிரம் லக்கங்களுக்குத் தேறும். இவற்றை அநுக்ரமணிகையாக வெழுதி, ஆகரமுங் காட்டி, இன்னவிடத்தில் இது உதாஹரிக்கப்பட்டுள்ள தென்பதையுங்காட்டி ஒரு பதிப்புச் செய்வதாக ஸங்கல்பித்தாயிற்று. பிரமாணங்களுக்குக் கருத்துரையுங் கூட எழுதி வெளியிடுவதென்பது அதிக அவகாசத்தை அபேக்ஷிக்கும்படியான மிகப் பெரியகாரியம். அஃதொன்று தவிர (மேலே தெரிவித்தமற்ற சேகரிப்புக்களை ஸமீபகாலத்தில் செய்துமுடிக்க நினைத்திருக்கிறது. எம்பெருமான் நிறைவேற்றியருளவேணும்.

வடமொழி தென்மொழிகளை நன்கு பயின்று வித்யாசாலைகளில் உபாத்யாய பதவியை வஹித்திருந்து விச்ராந்திபெற்றவர்களில் ஒருவர் விரும்பப்படுகிறார். யோக்யதைக்குத் தக்கபடி ஸத்காரமளிக்கப்படும். ... ... *

---

## வரில்பொகடேன் கெடில்தேடேன்

ஈடுமுப்பத்தாறாயிரப்படி யமுதக்கடலில் காணும் ஸ்ரீஸூக்தி ரத்னங்கள் பல்லாயிரக்கணக்கிலன்றோவுள்ளன. அத்தகைய ரத்னத்திரளில் "வரில் பொகடேன். கெடில் தேடேன்" என்பது ஒரு ஸ்ரீஸூக்தி ரத்னம். இதன் பொருள் உபதேசத்தாலறியக் கூடியதன்றே. கிடைத்தால் கொள்ளுவேன், கெட்டுப் போனால் அதைப்பற்றிக் கவலை கொள்ளமாட்டேன் என்பது இவ்வாக்கியத்தின் கருத்து. உலகவியற்கையை உற்றுநோக்கும்போது நாம் இருவகையாகக் காண்கிறோம். (அதாவது) சில பொருள்களை மிகவிரும்பி அவற்றைப் பெறுவதற்குப் பிரபலமான முயற்சிசெய்வது. பெற்றுவிட்டால் பெரும்பேறு பெற்றதாகக் கொந்தளிப்பது. பெற்றவதனை இழந்துவிட்டால் மிகமிக வருந்துவது—இது ஒருவகை.

மற்றொருவகையாவது, ஒரு பொருள் மிகச் சிறந்ததாயினும் அதைப் பெறுவதற்கு முயற்சி கொள்ளாமலிருப்பது. தானாகவே அநாயாஸமாகக் கிடைத்தால் கொள்ளுவது. அப்படி கொள்ளப்பட்டவது தவறிப்போனால் 'ஐயோ! தவறிப் போய்விட்டதே' என்று வருத்தங்கொள்வதோ, அதை மீண்டும் பெறுவதற்கு முயற்சிகொள்வதோ இவை யொன்றுமில்லாமலிருப்பது. இவ்விரண்டுவகைகளை

யும் நாம் உலகில் எங்கும் எந்த நபர்களிடத்திலும் கண்டுவருகிறோம், இவ்விரு வகைகளையும் ஒரே நபரிடத்திலும் வஸ்துபேதத்தாலே கண்டுவருகிறோம்.

இப்போது இதை நாம் எதற்காக எழுதுகிறோம் தெரியுமோ? நாமே தெரிவிக்கிறோம். நமது ஸ்ரீராமாநுஜனுக்கு ஆயுள் சந்தாவாகச் சிறு தொகையையாவது அனுப்பிவைக்கவேணுமென்று தெரிவித்திருந்தோமல்லவா? அது எதற்காகத் தெரிவித்தோமென்றால், "வரில் பொகடேன் கேடில் தேடேன்" என்கிற நியாயத்தை ஸ்ரீராமாநுஜன் விஷயத்தில் கொண்டிருப்பவர்கள் யார் யார்? என்பதைப் பரீக்ஷித்தறிவதற்காகவே. 'பலதுளி பெருவெள்ளம்' என்கிற ரீதியில் பலரிடத்தில் கிடைக்கும் சிறுதொகையும் இப்போது நாம் கொண்டிருக்கும் மிகப் பெரிய காரியங்களுக்கு உதவியளிக்குமெனினும் நாம் அதை முக்கியமாகக் கணிசிக்கவில்லை. கீழே தெரிவித்த பரீக்ஷையையே முக்கியமாகக் கொண்டோம். இன்னமும் சிறிது நின்று பார்ப்போம். ... ... *

## வேதபாராயண அபிவிருத்தி

"ப்ராஹ்மணாநாம் தனம் வேத:" என்பது ப்ரஸித்தமான வசனம். திருமங்கையாழ்வார் திருநெடுந்தாண்டகத்தில் இந்த வசனத்தின் மொழிபெயர்ப்பாகவே (பா. 4.) "அந்தணர்மாடு" என்கிறார் வேதத்தை. "மாடு பொன் பக்கம் செல்வம்" என்பது நிகண்டு. அந்தணர் மாடு என்பது அந்தணர் செல்வம் என்றபடி. அந்தணராகப் பிறந்தவர் ஒவ்வொருவரும் இந்த வசனத்தையும் பாசுரத்தையும் நினைவிற் கொள்ள வேணும். அந்தணர்களாய்ப் பிறந்தவர்கள் உபயுக்த வேதபாகங்களை யாவது தவறாமல் ஓதுவதென்கிற விரதத்தைப் பலரிடம் நாம் நமது வாழ்நாளில் பார்த்திருந்தோம். இப்போது உபநயனமும் சொக்காயணிந்து கொண்டே நடைபெற்று வருவதால் வேதாத்யயன வார்த்தைக்கே ப்ரஸக்தி



மேலை மாம்பலம் வேதபாராயண ஸபையின் நிகழ்ச்சி.

யில்லை. அபரிஹார்யமான இந்த நிர்வேதத்தை விட்டொழித்து, பரமானந்தத்துடன் இரண்டு ஸந்தோஷ விஷயங்கள் தெரிவிக்கிறேன்.

1. சென்னை மேலை மாம்பலத்தில் சங்கரமடத்தில் தினப்படியாக மாலைவேளையில் ஏழெட்டுகனபாடிகள் கூடி அநுஸ்யூதமாக க்ரமபாராயணம் நடத்தி வருகிறார்கள். இது மட்டுமன்று; வேதவிஷயமான உபந்யாஸங்களையும் அடிக்கடி நடத்தி வருகிறார்கள். இக்கட்டுரையின் முகப்பில்காணும் படம் அத்தகைய ஸந்தர்ப்பத்தில் அமைந்ததே. ஸமீபகாலத்தில் இந்த ஸபையின்மூலமாக மண்டலபாராயணமொன்று ஆரம்பமாகும். இது வருஷந்தோறும் கார்த்திகை மாதத்தில் நடைபெறுவதே. ஸப்தகாண்டத்திலுள்ள நாற்பத்து நான்கு ப்ரச்னங்களையும் நாற்பத்துநான்கு நாட்களில் க்ரமபாராயணமாகச் செய்வதாம். ஒவ்வொருநாளும் ஒவ்வொரு ஆஸ்திகருடைய ஆராதனையாக வைத்து அவருடைய க்ருஹத்தில் பாராயணக்காரர்கள் கோஷ்டியாகச் சென்று ஓதுவது. ப்ரஹ்மஸ்ரீ E. R. நடராஜ சர்மா என்பவர் கார்யதர்சியாயிருந்து ஆஸ்தையுடன் இதை நடத்திவருகிறார்.

2. ஸமீபகாலத்தில் நாம் ஒரு நாள் நெல்லூர் போய்வரநேர்ந்தது. அவ்விடத்தில் ஒரு ப்ரஹ்மானந்த மனுபவிக்கலாயிற்று. ஒரு பரம வைதிகோத்தமர் தெனாலி தாலூகாவிலிருந்து நான்கு கனபாடிகளை வரவழைத்து ஸப்தகாண்டங்களையும் முப்பது நாட்களில் கனபாராயணம் செய்வித்தார். நாடோறும் காலையில் ஐம்பது பஞ்சாதியும், பிற்பகலில் ஐம்பது பஞ்சாதியுமாகப் பாராயணம் செய்தார்கள். நமது ப்ராந்தத்தில் ஸம்ஹிதையைத் தட்டுத் தடங்கலின்றி ஓதுமவர்களே தேடிப்பிடிக்க வேண்டும்படியிருக்கிறார்கள். க்ருஷ்ணா கோதாவரீ தீரங்களில் ஜலப்ராயமாக கனபாராயணம் செய்பவர்கள் மலிந்திருக்கின்றார்கள். ப்ரஸ்துதகன பாராயணத்தை ஒருநாள் கேட்டபோது உண்டான ஆனந்தம் எல்லை கடந்து சென்றது. பாராயணம் நடத்திவைத்த பரமாஸ்திகர் ஒவ்வொரு ச்ரோத்ரியர்க்கும் ஆயிரத்து நூற்றுப் பதினாறு ரூபா ஸன்மானமளித்தார். அதுவும் நமக்குப் பரமானந்த ஸந்தோஹமாயிருந்தது.

ஆங்காங்கு வேதசப்த ராசிகள் நடையாடிக் கொண்டிருப்பதனால் தான் தர்மதேவதை ஜீவித்துவருகின்றாள். நமக்குத் தெரிந்து தென்னாட்டில் பலவூர்களில் ஏராளமான மூலதனத்துடன் வேதபாடசாலைகள் ஏற்பட்டிருந்ததுண்டு. கட்டிடந்தானுள்ளதிப்போது. திருக்கோவலூர்ப்பதிகத்தில் "மறைவளரப் புகழ் வளரமாடந்தோறும் மண்டப மொண்டொளியனைத்தும் வாரமோத" என்றருளிச் செய்கிறார். வைதிகர்களின் வேதசர்ச்சைகளில் வாரமோதுவதென்று ஒரு ப்ரக்ரியை யுண்டு. அதனைக்கூறினர். இவ்வளவோடு இக்கட்டுரையை நிறுத்திக் கொள்ளுவோம். .... .... .... .... *

---

## அபூர்வ க்ரந்த லாபம்.

வேதாந்ததேசிக க்ருதியான தத்வார்த்த ரத்நாவளி யென்கிற ஸம்ஸ்க்ருத க்ரந்தம் லுப்தமாய்விட்டதென்று பெரியார் சொல்லி வந்தார்கள். அது டீகையோடுங்கிடைத்து தேவநாகரி லிபியில் அச்சாகி வருகிறது. நமது வைதிக மநோஹராவில் இது ஸேவிக்கத்தக்கது. மிக அருமையான க்ரந்த ரத்னமிது.

# அன்பர்களான இருவரைப்பற்றி.



உயர்திரு. R. நாராயணன்.



உயர்திரு. S. அண்ணுமலை.

நாம் உபயோகங்கொள்ளும் பண்டங்களில் பெரும்பாலும் மூன்று வகுப்புகளைக் காண்கிறோம். உத்தமம் மத்யமம் அதமம் என்பதாக. மிகவுயர்ந்ததை உத்தமம் என்கிறோம். மிகத்தாழ்ந்ததை அதமம் என்கிறோம். நடுத்தரமானதை மத்யமம் என்கிறோம். நெய் பால் எண்ணெய் குங்குமப்பூ ரத்னம் மாம்பழம் பலாப்பழம் முதலான எந்த வஸ்துவிலும் இந்தப் பாகுபாடுகளைப் பார்க்கலாம். இப்படியே மனிதர்களிடத்திலும் காணலாம் மனிதர்களிடத்தில் ஸத்வ ரஜஸ்தமோ குணங்களையிட்டுக் காணக்கூடிய பாகுபாடுகள் பலவகைப்பட்டிருந்தாலும் அன்பு என்கிற ஒரு பண்பை யெடுத்துக்கொண்டு பேசுவோம். சிலரைநோக்கி 'இவர்கள் அன்பர்கள்' என்று நாம் பொதுவாகப் பேசிவிடலாம். அன்பில் எவ்வளவோ வாசிகள் உண்டென்பதை அறியாதாரில்லை. ப்ரத்யக்ஷத்திற்போல பரோக்ஷத்திலும், வாக்கிற்போல உள்ளத்திலும், இன்றுபோல நாளையிலும் ஒருபடிப்பட்ட அன்பு கொண்டவர்களை நாம் தேடிப்பிடிக்கவே வேண்டியிருக்கும்.

இங்கு மேலே காட்சிதரும் இருவர் நமக்குப் பல நாளைய அன்பர்கள். உள்ளும் புறமும் ஒத்த அன்பர்கள். எதிரிலும் மறைவிலும் ஏற்றத்தாழ்வற்ற அன்பர்கள். சென்னைவாசிகளான இவர்களுக்கு நாம் வாழ்த்துக் கூறி நிற்கிறோம். *

# அந்த வகுப்பில் படித்தவர்கள் இல்லையா?

'அந்த வகுப்பில்' என்றால் எந்த வகுப்பிலென்று கேள்விபிறக்கும். மேலே வாசித்துக்கொண்டு போனால் இன்ன வகுப்பென்பது தெளிவாகும். "Sri Vedanta-desika – 7th Centenary Commemoration Central Committee, Madras" (2-10-68) என்று தலையங்கங்கொண்ட வொரு திலகாஷ்ட மஹிஷபந்தன க்ரந்தியைப்பற்றி ஸ்ரீ ராமாநுஜன் 241-ல் 10, 11, 12, பக்கங்களை மீண்டுமொருமுறையெடுத்து வாசிக்கக் கோருகிறோம். ஸயூத்யர்களும் வெறுக்கும்படியான அந்த க்ரந்தியில் சில விஷமங்களைப்பற்றி மட்டுமே சில ஆப்தர்களின் வேண்டுகோளுக்கிணங்கி இங்கு விமர்சிக்கிறோம். அதில் பக்கம் 324-ல் இரண்டே விஷயங்களை இங்கு எடுத்துக்காட்டி, படித்தவர்களில்லாத வகுப்பின் சோசநீயத்வத்தை விளக்குவோம்.

இரண்டே விஷயங்களென்றோம். முதல் விஷயம் கேண்மின். பக்கம் 324 என்றோம்; அதாவது, ஆனந்தஸூரி என்று ஒருவராம். அவர் ஸந்தானமில்லாத துயரத்தினால் தனியே கிடந்துறங்குகிறாராம். அவ்விதமாக ஒரு படம் காட்டியிருக்கிறதே, அதற்கு முன்பக்கம். அதில் விஷயமென்னவென்றால், "லோகாசார்யாதிஸச்சிஷ்யார்ப்பித சாரீரபாஷ்யக:" என்று தேசிகர்க்கொருநாமமாம். வேதாந்தாசாரியரானவர் லோகாசாரியர் முதலான ஸச்சிஷ்யர்களுக்கு சாரீரக பாஷ்யத்தை அர்ப்பணம் செய்ததாக இங்கு விவக்ஷையாம். லோகாசார்யர் வேதாந்தாசார்யரிடத்தில் ஸ்ரீபாஷ்யம் ஸேவித்தார் என்கிற விவக்ஷையை. ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கவல்ல ஒரு நாமத்தைச் செய்து கொடுக்க இவர்களது வகுப்பில் ஒரு பண்டிதனில்லையே. "ஸ்ரீபாஷ்யார்த்தோப தேசார்த்தி லோகாசார்யாதி ஸேவித:" என்று எளிதாக நாமமியற்ற இவர்கள் கோஷ்டியில் ஒரு படிப்பாளி இல்லையே!.

"லோகாசார்யாதி ஸச்சிஷ்யார்ப்பித சாரீரபாஷ்யக:" என்று மஹாதாப்ரயாஸேந ஒரு நாமமியற்றி, இதற்குமேல் சில ஆக்ஷேபங்களைத் தாமாகவே கிளப்பி ஸமாதானம எழுதுகிறவழகு மிக விசித்திரம். பாஷ்யக: என்றிருக்கலாமா? என்று தனக்கே தோன்றிய ஆக்ஷேபம். அப்படி வித்வான்கள் ப்ரயோகிப்பதுண்டு என்று தானே தெரிவிக்கும் ஸமாதானம். சாரீரகபாஷ்யமாகையாலே (சாரீர) என்றதற்குப் பக்கத்திலிருக்க வேண்டிய ககாரம் (பாஷ்ய) என்பதன் பக்கத்தில் விழுந்திட்டது. இதை அங்கே கொண்டு கூட்டிக்கொள்ள வேண்டியது வன்பது லோகோத்ரமான ஸமாதானமாகுமல்லவா?.

இதற்கு மேல் எழுதியிருப்பது பாரீர்; "லோகாசார்யர் வயதில் பெரியவர் என்பதனால் ஆச்ரயிக்கவில்லை என்பது ஏற்படாது. கூரத்தாழ்வான் உடையவரைக் காட்டிலும் வயதில் பெரியவர்; இவர்களும் ஆச்ரயிக்கவில்லை என்பது ஏற்படும்" என்பதாக. இப்படி எழுதினவருடைய நெஞ்சிலுள்ள விவக்ஷிதமென்ன? எழுதப்பட்டுள்ள வாசகம் என்ன? விவக்ஷிதார்த்தம் மெய்யாகவே யிருக்கட்டும்; அதை ஸமஞ்ஜஸமான முறையில் எழுதிக் கொடுக்க ஒரு எழுத்தாளர் இல்லையா? ஸ்ரீரங்கத்தில் கோயிலாத்தான் மகனும் கூரகுலோத்தமாசாரியரும்

தேசிகரைக் காட்டிலும் வயஸா கநிஷ்டர்களாயிருந்தும் அவர்கள் தேசிகனால் ஆச்ரயிக்கப்பட்டதையும் த்ருஷ்டாந்தமாகக் காட்டியிருக்கலாமே. நடாதூரம்மாள் தேசிகனைக் காட்டிலும் வயஸா ஜ்யேஷ்டராயிருந்தும் தேசிகனுடைய அத்புத ஜ்ஞான வைபவத்தைக் கண்டும், தம்முடைய கொள்கையையும் அதிகரண ஸாரா வளியில் கண்டிக்கும்படியான மேதாப்ரதிபா விலாஸங்களைக் கண்டும் ஸ்வஸ்மாத் கநிஷ்டரான தேசிகனை ஆச்ரயித்தாரென்பதையு மெடுத்துக் காட்டி விட்டால், வயஸாஜ்யேஷ்டரும் வைகுண்டவாஸியுமான லோகாசார்யர் ஓடிவந்து தேசிகரை ஆச்ரயித்தா ரென்பது நிராக்ஷேபமாகத் தேறிவிடுமே. ஆத்ய ப்ரஹ்ம தந்த்ர ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் தேசிகனுக்கு சிஷ்யராயிருந்தாலும், அவர் ஸம்ந்யஸித்த பிறகு தேசிகன் அவர்க்குப் பரிசாரகராயிருந்தா ரென்பதையும் ஒருபுடை த்ருஷ்டா ந்தமாகக் காட்டி யிருக்கலாமே. அப்போது சங்காபரிஹாரம் எளிதாக ஆய்விடுமே.

இதற்குமேல் ஒரு விசேஷார்த்தம். (அதாவது) "வயதில் லோகாசார்யர் பெரியவராகையாலே லோகாசர்ர்யாதி ஸச்சிஷ்ய என்று இவரை முதலில் நிர்தே சித்தது. பாண்டித்யத்தில் தேசிகரின் குமாரர் முதலானவர்கள் இருந்தபடியால் வித்வத்சிஷ்ய கோஷ்டியில் லோகாசார்யரை நிர்தேசிக்கவில்லைபோலும்" என்ப தாக. இதற்கு "தாத்பர்ய விஷயம்" என்று மகுடமாம். எந்த சொல்லிலிருந்து கிடைத்த தாத்பர்யமோ இது. வேதாந்தாசார்ய சிஷ்யர்களில் வயதில் மூத்தவர் களுக்கு ஒரு ஜாபிதாவும், பண்டிதர்களா யிருப்பவர்களுக்கு ஒரு ஜாபிதாவும் இருக் கிறது போலும். த்விதீயப்ரஹ்மதந்த்ர ஸ்வாமி பணித்த தேசிக வைபவத்தில் இந்த ஜாபிதா உள்ளதுபோலும். தேசிக பணிந்த ஸ்ரீரங்கவாஸிகளான ஆசாரி யர்களின் ஜாபிதாதானே அதிலுள்ளது.

இரண்டேவிஷயங்களென்றோம்; முதல் விஷயமாயிற்று. இரண்டாவது விஷயம் கேளீர். (அந்த 324 பக்கத்திலேயே) நிகமனம் என்ற தலைப்பின்கீழ் க்ருதாசீதீ ஸஹஸ்ரத்ர-மிடாகமபரீமல: என்பது ஒரு தேசிக நாமமாம். இப்படி யொரு ஸம்ஸ்க்ருதவாங்மயம் ஒருவகுப்பில் தோன்றுவது வேறு எந்தவகுப்பிலுங் காண முடியாத அதிசயமல்லவா? "க்ருதாசீதீ ஸஹஸ்ரத்ர" என்பதற்கு எப்படி விக்ரஹம்? என்று கேட்டால் "எங்கள் க்ருஹத்தில் ஸாளக்ராமமேயொழிய விக்ரஹமே கிடையாது" என்று கூறும் வகுப்பினரிவர்கள். இதற்குமேல் பரீமல: என்று ஒருபதமாம். பரீவாஹ: பரீஹாஸ:, பரீணஹ: இத்யாதி பதங்களைக் கண்டவர் (பரி) என்பது (பரீ) என்று ஆனதற்கு என்ன நியாமகம் என்று கேட் டறிய கில்லாமல் (பரீமல:) என்றொருபதத்தை ஸ்ருஷ்டிப்பதும், அதைப் பதினா யிரவர் கண்டு உகப்பதும் அந்தோ! இந்த வகுப்பின் வெட்கமின்மை என்னே! மூலத்தினழகு கிடக்கட்டும். வியாக்கியானத்தினழகைக் காணீர். "திருவாருயிரப் படியின் வியாக்கியானமாக தேசிகன் அருளிச்செய்த நிகமபரீமலம் என்கிற க்ரந்தம் லுப்தமாகிவிட்டது. ஜீயர் கீதாதாத்பர்யதீபம் லுப்தம் என்று சொல்லுகிறுப்போல் இங்கும் அப்படியே கண்டுகொள்வது" என்பது பரீமலத்தின் துர்நாற்றம். அப் படியே கண்டுகொள்வோம். மேலே காணீர்.

"ஆருயிரப்படிக்குப் பின்புள்ள வியாக்கியானங்களிலுள்ள
அபார்த்தங்களுக்குக் கண்டனமாக அவதரித்தது"

என்றெழுதியுள்ளார். பரீமலத்தைக் கண்கொண்டு பாராத இவர்களுக்கு அந்த மலத்திலிருக்கிற மணம் எப்படியோ தெரிந்துவிட்டதே! சில வருடங்களுக்கு முன்பு ஒரு அட்வகேட் இப்படி யெழுதிவைக்க அதற்கு ஸ்ரீரங்கவித்வான் எழுதி உலகம் பரவியுள்ள பதிலுரை பலர்க்கு மறந்திருக்கும், பலர்க்குத் தெரியவும் தெரியாது. அதையிங்கு அநுவதிக்கிறேன். ஒருவர் தீர்க்க ப்ரஹ்மசாரியாயிருந்து வருகிறார். எவ்வளவோ முயன்றும் விவாஹமாகவில்லை. வயது அறுபதுக்கு மேலாயிற்று. விவாஹமாகவில்லை யென்கிற அவமானம் தீருவதற்கு ஒருயுக்தி செய்தார். ஒரு முஹூர்த்த நாளைக் குறிப்பிட்டு திருமலைமேல் தனக்கு விவாஹம் நடைபெறுவதாகப் பத்திரிகையச்சிட்டு முஹூர்த்த நாளுக்குப்பிறகு அக்கடிதம் உற்றுருறவினர்க்குக் கிடைக்கும்படி போஸ்டு செய்துவிட்டார். பந்துக்கள் விவாஹமாய்விட்டதாகவே யெண்ணிக் கொண்டிருக்கிறார்கள். பிரமசாரி கச்சங்கட்டிச் சந்தனம் பூசிப் பூவணிந்து திரிந்துகொண்டிருந்து, ஒருமாதம் பொறுத்து அந்த மனைவி பாம்புகடித்து இறந்து விட்டதாக ஜ்ஞாதிகளுக்குக் கடிதம் போட்டுவிட்டார். அவரவர்கள் ஆசௌசம் கொண்டாடி வருகிறார்கள். மாயா க்ருஹஸ்தர் பதின்மூன்று நாள்வரையில் தலைமறைவா யிருந்துவிட்டுப் பிறகு ஊர்வந்து சேர்ந்து வீட்டு வாசலில் புரண்டுபுரண்டழுகிறார்; "அவளுடைய குரலழகு என்னே! குழலழகு என்னே! நடையழகு என்னே! துடையழகு என்னே! காதழகு என்னே! காலழகு என்னே! மூக்கழகு என்னே! முகவழகு என்னே!" என்று சொல்லிச்சொல்லி யாரும் தேற்றவொண்ணாதபடி கதறிக் கதறி விக்கிவிக்கி யழுகிறார் பாவம்!."

ஸ்ரீரங்கம் வித்வான் ஸ்வாமி எடுத்துக்காட்டின இக்கதை இவர்கள் தெரிவிக்கிற க்ருதாசீதீ ஸஹஸ்ரத்ர-மிடாகம பரீமல விஷயத்தில் சாலப்பொருந்தும். அந்த ப்ரம்மசாரிக்கும் மேலாக இவர்கள் பரீமல மரணத்திற்கு அழுதழுது ஆயுளைக் கழிக்கலாம். அந்த பரீமலம் லுப்தமென்கிறார். என்றைக்கு லுப்தமென்று கேட்டால் அன்றைக்கே லுப்த மென்பர். அது ஆறுயிரப்படியின் கண்டனமாகத் தோன்றியதா? மற்ற படிகளின் மண்டனமாகத் தோன்றியதா? என்று கேட்டால், பிள்ளானுடைய திருநாமத்தையும் ஆறுயிரப்படியின் ப்ரஸ்தாவத்தையும் அணுமாத்ரமும் காட்டியறியாதவர் வேதாந்த குரு-என்கிற தத்துவத்தையும், த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி முதலான பல க்ரந்தங்களை நம்பிள்ளை திருவடிகளின் ஸ்ரீஸூக்தி மயமாகவே நிரப்பியுள்ளார் தேசிகர்-என்கிற தத்துவத்தையும் உள்ளபடியுணர்ந்தவர்கள் மானிகளாயிருந்தால் ஆகாயத்தைநோக்கி அழவேணும்.

இன்னமும் எழுதுகிறார்கள்—32 ரஹஸ்யங்களில் பின்புள்ளார்களின் அபார்த்தங்கள் கண்டிக்கப்பட்டு ஒழிந்து விட்டனவாம். அதையெல்லாம் தனியாகத் தொகுத்து ஸமயாந்தரத்தில் வெளியிட உத்தேசமாம். ஸமயாந்தரமென்ன? இத்தகைய விப்ரலம்போக்திகளாலே ஸ்வகீயர்களான சில யதாஜாதர்கள் வஞ்சிக்கப்படலாமே யொழிய, ப்ராமாணிகர்களில் ஒருவரும் வஞ்சிக்கப்படமாட்டாரென்பது கல்வெட்டு, எந்த விஷயத்திலும் தேசிகனுடைய திருவுள்ளம் இன்னதென்று ஈஷத்தும் காணகில்லாத இவர்கள் எது எழுதினாலும் அது ஸ்ரீதேசிக ஸூக்தி கண்டனமா யிருக்குமத்தனை. ஸமயாந்தர ப்ரதீக்ஷை வேண்டாதபடி இப்போதே இந்த திலகாஷ்ட மஹிஷபந்தனத்திலேயே வெளியிட்டிருக்கிற அழகைக் காட்டுவோம். பக்கம் 426ல் கடகத்வம் என்று மகுடமிட்டு எழுதுகிறார்கள்

காண்மின்—"ஸ்ரீதேசிகன் 'மோக்ஷப்ரதே பகவதி ஏஷா கடகதயா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்' என்றதனால் உபாயத்வம் சொல்லுபவர்க்கு ஒரு குறையுமில்லை" என்று அதி கம்பீரமான ப்ரதிஜ்ஞை செய்து, மேலே பண்ணியுள்ள உபபாதனத்தின் அழகுக்கு ஆலத்தி வழிக்கவேணும். யஜ்ஞோபவீத தாரணம் ஸர்வ வைதிக ஸம்மதம் என்று சொன்னால் 'ஊர்த்வ புண்ட்ர தாரணம் து ந ஸர்வஸம்மதம்' என்றதாய் விடுமோ? என்று க்ஷேபிகிறார்கள்.

ஐயோ! இவர்களது வகுப்பில் விவேகிகளில்லையா? இவ்வளவு மோசமான பேர்வழிகளா? ஒருவர் நான் அபரதேசிகன் என்கிறார். இன்னொருவர் நான் பூர்வ தேசிகன் என்கிறார். இன்னுமொருவர் நான் பூர்வாபர தேசிகனென்கிறார். மற்றொருவர் நான் நூதன தேசிகனென்கிறார். வேறொருவர் தேசிகஸ்யாபி தேசிகோஹம் என்கிறார். இவர்களெல்லாரும் இந்த அபத்தக் களஞ்சியங்களை எப்படித்தான் கண்டு ஸஹித்திருக்கிறார்களோ தெரியவில்லையே. யஜ்ஞோபவீத தாரணமும் ஊர்த்வ புண்ட்ர தாரணமும் ஏகாச்ரயத்தில் கூடாதவையோ? "தேவதத்தே சக்ரவர்த்திபதம் வஹதிஸதி யஜ்ஞதத்த: அமாத்யபதம் வஹதீதி ஸர்வஸம்மதம்" என்றால் தேவதத்தன் போலவே யஜ்ஞதத்தனும் சக்ரவர்த்திதான் என்று இவர்கள் அர்த்தஞ் சொல்ல வருவார்கள்போலும். இரண்டு வ்யக்திகளை யெடுத்து ஒருவ்யக்திக்கு ஒரு காரியத்தையும் மற்றொரு வ்யக்திக்கு மற்றொரு காரியத்தையும் வ்யவஸ்திதமாகச் சொன்னால் அந்த வ்யவஸ்தையைக் குலைக்க யாராலாகும். "அஸ்தி கர்மார்ஹ பலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷண மநுக்ரஹே". என்றும் சொல்லிவைத்த தேசிகரைத் தங்கள் வழிக்கு வலியப் பிடித்திழுத்தாலும் அவர் நகரவும் மாட்டாரென்பது அஸத்கர்வ நிர்வாபணத்திலும் தத்வார்த்த ரத்நாவளியிலும் கதிராயிர மிரவிகலந் தெரித்தா லொப்ப விளங்கக் காண்பர் கலையறக் கற்றமாந்தர்.

நிகமனம். "அந்த வகுப்பில் படித்தவர்களில்லையா?" என மகுடமிட்டு இக்கட்டுரையைத் தொடங்கியுள்ளோம். தொடங்கியதை ஒருவாறு தலைக்கட்டியுமாயிற்று. அந்த வகுப்பில் படித்தவர்கள் இல்லையென்று நாம் எண்ணி யிருக்கிறோம். "இஹ ஸந்தோ ந வா?" என்ற பிராட்டி உடனே 'ஸந்தி' என்றாள். அப்படி நாமும் ஸந்தியென்போம். அதாவது படித்தவர்கள் இருக்கிறார்களென்போம். மேலே குறித்த திலகாஷ்டமஹிஷ பந்தனத்தில் நூற்றுக்கணக்கான பொம்மைகள் வெளியிடப்பட்டிருக்கின்றன. பரலோகம் சென்று சேர்ந்தவர்களின் பொம்மைகள் கிடக்கட்டும். ஜீவித்திருக்கும் பொம்மைகள் இந்த அவத்தக் களஞ்சியத்தைப் பாராமலிருப்பதாக நினைக்க முடியுமா? "மதி தௌர்பல்யாத் ந மத தௌர்பல்யம்" என்கிற ரீதியிலே மதாபிமானத்தாலே எழுதுமவை கிடக்கட்டும். 'மஹிஷஸ் ஸ¬ஷ¬வே மஹிஷீ மிதிவாக்ச் ச்ரவணாநுபதக்ஷண ஏவ ஸ¬தம், ஸஹஸைவ ஸமாஹர துக்தமிதி ப்ரபுராஹ முதேதி க்ஷதாப்யுசிதா." என்று தேசிகனருளிச் செய்கிறபடியே அன்னவர்களின் வியவஹாரங்கள் எவ்வளவும் நடைபெறட்டும். "க்ருதாசீதீ ஸஹஸ்ரத்ர-மிடாகமபரீமல:" என்றாற்போன்ற அஸப்ய வாக் விந்யாஸங்களையும் ஜீவத் பொம்மைகள் சிக்ஷிக்கவில்லையென்றால் அவர்களது படிப்பை என்னவென்று சொல்லுவதந்தோ! "க்ருதாசீதி ஸஹஸ்ராக்ய

த்ரமிடாகம ஸௌரப:" என்று எளிதாக அரை ச்லோகம் பண்ணிக்கொடுக்க அந்த வகுப்பில் ஆளில்லையே. கதைகட்டத் தெரிந்ததேயொழிய அந்தோ! கவி கட்டத் தெரியவில்லையே.

இவ்வளவோடும் நில்லாமல் "க்ரந்தைச் சதுஸ்ஸப்ததிபிஸ் ஸஹஸ்ரை:" என்று மஹா கவியாய் வித்வத் ஸார்வபௌமரான தொட்டயாசாரியர் பணித்த தாக எடுத்துக்காட்டுவது எவ்வளவு ஸாஹஸம்! இந்தக் கவியைக்கட்டின (late) சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் நமக்குக்ஷாமணபத்ரிகை யனுப்பிப் பிறகு பலவாண்டு ஜீவித்திருந்து போய்ச்சேர்ந்தார். இருள் துயக்கு மயக்கு மருள்களைத் தங்களள விலே நிறுத்திக்கொள்ளாமல் தொட்டயாசார்யஸ்வாமி போன்ற ப்ரசண்ட பண்டி தோத்தமர்கள் மீது ஏறிட நினைப்பதும் மஹாபசாரம் "நாம் தேசிகரை இன்னு ரென்று தெரிந்துகொண்டு இன்னும் இருநூருண்டு நிறையவில்லை" யென்று உண்மையை யுணர்ந்தவர்கள் எத்தனை கந்தைப் புராணங்கள் வெளியிட்டாலும் ஸர்வம் ஹுதம் பஸ்மநி.

ஸாம்ப்ரதாயிகார்த்த சர்ச்சைகளில் மத்யஸ்தர்கள் கிடைப்பது அரிதானுலும் ஸாமாந்ய சாஸ்த்ரார்த்த சர்ச்சைகளில் மத்யஸ்தர்கள் எளிதாகக் கிடைப்பர்கள். "க்ரந்தைச் சதுஸ் ஸப்ததிபிஸ் ஸஹஸ்ரை:" என்று தொட்டயாசாரியர் ஸாதித்த தாக இவர்கள் காட்டும் ரசனையை பண்டிதரென்று பேர்பெற்ற எந்த மதஸ்தரும் கேட்டவுடனே சிரிப்பர். "விம்சத்யாத்யாஸ் ஸதைகத்வே ஸங்க்யாஸ் ஸங்க் யேய ஸங்க்யயோ:" என்பது ஸர்வநிர்விவாதமான கட்டளை. விம்சதி சப்தம் முதற்கொண்டு கோடாகோடி பர்யந்தங்களான ஸங்க்யாவாசக சப்தங்கள்யாவும் நித்யைகவசநாந்தங்கள். ஏதாவதா, விம்சதய:, சதாநி, ஸஹஸ்ராணி என்று பஹுவசநாந்தமாக ப்ரயோகிக்கக் கூடாதென்பதில்லை. விசேஷணமாகவன் றிக்கே விசேஷ்யமாக ப்ரயோகிப்பதானுல் அப்படி தாராளமாக ப்ரயோகிக்கலாம். த்ரீணி சதாநி, சத்வாரி ஸஹஸ்ராணி இத்யாதி ப்ரயோகங்களை நிராபாதமாகக் காண்கிறோம். சத்வாரி ஸஹஸ்ராணி என்கிருப்போலே விம்சதயஸ் ஸஹஸ் ராணி, ஸப்ததயஸ் ஸஹஸ்ராணி என்ருல் ஸாரஸ்வத ஸாரஜ்ஞர்கள் சிரிப்பர்கள். விம்சதிஸ் ஸஹஸ்ராணி, ஸப்ததிஸ் ஸஹஸ்ராணி, அசீதிஸ் ஸஹஸ்ராணி என்று தான் சொல்லியாக வேண்டும். ப்ரக்ருதே. க்ரந்தை: என்பது விசேஷ்யமாய் விட்டது. சதுஸ்ஸப்ததிபி: என்பது எங்கே அந்வயிக்கிறது? ஸஹஸ்ரை: என்பது எங்கே அந்வயிக்கிறது? என்றுகேட்டால் திசைதொறும் விழித்து நிற்கவேண்டி யது தவிர வாய்திறக்க வழியில்லை. பண்டிதர்களின் வாக்கிலும் அபசப்த ப்ரயோகம் நேர்ந்துவிடுவதுண்டு; ஆனுல் 'க்ரந்தைச் சதுஸ்ஸப்ததிபிஸ் ஸஹஸ்ரை: என்ற அபப்ரயோகம் சேட்லூரார்போல்வார்க்குத் தவிர மற்றையோர்க்குக் கனவிலும் நேராதென்பது கல்வெட்டு. வரிதோறும் எழுத்துத்தோறும் அபப்ரம்சமயமான ப்ரஸ்துத புஸ்தகம் தலையணையாயிருந்து உதவத் தடையில்லை. ... *

(ச்லோ) ஸேவேதி சுஷ்கநாம்நா ஸ்வாத்மாநம் க்க்யாபயந் நர: கோபி,
துரபிநிவேசமஹிம்நா யத்யதலேகீத் தத்ர நிர்த்தூதம்.

---

# முகுந்தமாலையில் எம்பெருமானாரநுபவம்.

## (சென்னை முத்தியால்பேட்டை கண்ணன் ஸன்னிதியில் 12—9—69ல் நடைபெற்ற வித்வத்ஸதஸ்ஸில் P. B. A. நிகழ்த்திய உபந்யாஸம்)

ஸ்ரீ குலசேகரக்ருதியாக ப்ரஸித்தமான முகுந்தமாலையில் * ஹே கோபாலக! ஹே க்ருபாஜலநிதே * என்று தொடங்கும் சுலோகத்தில் உத்தரார்த்தம் தொடங்குகையில் "ஹே ராமாநுஜ! ஹே ஜகத்த்ரயகுரோ!" என்றுள்ளது. பலராமாநுஜனென்கிற விவக்ஷையினால் கண்ணபிரானை ராமாநுஜ! என்று விளித்திருந்தாலும். இதிலுள்ள ஸம்போதனங்களெல்லாம் பகவத் ராமாநுஜரென்று ப்ரஸித்தரான எம்பெருமானார்க்கும் பொருந்துவதாக உபபாதித்து விஜ்ஞாபிக்கிறேனிங்கு, விரிவான உபந்யாஸத்தை மிகச் சுருக்கி இங்கு வெளியிடுகிறபடி.

**ஹேகோபாலக ஹேக்ருபாஜலநிதே! ஹேஸிந்துகந்யாபதே!**
**ஹேகம்ஸாந்தக! ஹேகஜேந்த்ர கருணாபாரீண ஹேமாதவ!**
**ஹேராமாநுஜ! ஹேஜகத்த்ரயகுரோ ஹேபுண்டரீகாக்ஷ! மாம்**
**ஹேகோபீஜநநாத! பாலய பரம் ஜாநாமி ந த்வாம் விநா.**

1 **ஹேகோபாலக!**="ஸர்வஸ்ய ஜகதஃ பாலெள வத்ஸபாலெள பபூவதுஃ" என்று ஸ்ரீவிஷ்ணு புராணத்திற் கூறியபடியே எம்பெருமான் * கோவலனாய் ஆநிரைகள் மேய்த்தது ப்ரஸித்தம். எம்பெருமானாருடைய கோபாலனத்தைக் கேளீர். ஆளவந்தார் 'ந்ருபசுஃ' என்றும், மணவாள மாமுனிகள் "வ்ருத்த்யா பசுர் நரவபுஃ" என்றும் அருளிச் செய்தபடியே * ஜ்ஞாநேந ஹீநஃ பசுபிஸ் ஸமாநஃ * என்னும்படி பசுப்ராயர்களான நம்மையெல்லாம் ரக்ஷித்தருளினவர். அநேகார்த்தகமான கோசப்தத்திற்கு வாக்கு என்கிற பொருளும் * யத்கோஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம் * இத்யாதிகளிலே ப்ரஸித்தமாகையாலே * தஸ்மை ராமாநுஜார்யாய நமஃ பரமயோகிநே, யஃ ச்ருதிஸ்ம்ருதி ஸூத்ராணாம் அந்தர்ஜ்வரம் அசீசமத் * என்கிறபடியே ச்ருதிஸ்ம்ருதி ஸூத்ரவாக்குக்களுக்குப் பிறர்கூறும் அபார்த்தங்களை நிரஸித்து ஸமஞ்ஜஸார்த்தங்களை நிலை நிறுத்தும் முகத்தாலே (கோ)ரக்ஷணம் செய்தருளினவர் எம்பெருமானார்.

2. **ஹேக்ருபாஜலநிதே!**=கண்ணன் என்பதற்குக் கருணையுடையவன் என்பதும் பொருள். அவதரித்தபோதே தன் கருணையை உலகமறியக் காட்டியருளினான். எங்ஙனே யென்னில்; தன்னைப் பெறுதற்கு ஸாதநாநுஷ்டானம் பண்ணின வஸுதேவர்க்கு முகத்தைக் காட்டிவிட்டு, அறிவொன்றுமில்லாத ஆயர்தலைவனுயீ * எடுத்த பேராளன் நந்தகோபன்தன் * என்று நிதியெடுத்தவனென்று ஆழ்வார் சொல்ல நின்ற நந்தகோபர்க்கு ஸகல போகங்களையும் நிர்ஹேதுகமாகக் கொடுத்தது க்ருபாஜலநிதித்வத்தை நன்கு காட்டினபடியிறே. இனி எம்பெருமானாருடைய க்ருபா ஜலநிதித்வம் ஜகத்ப்ரஸித்தம். பூருவர்களை அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர்களென்றும் ஸ்வாமியை க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யரென்றும் வழங்குவர். இதன் காரணத்தை மணவாளமாமுனிகள் உபதேச ரத்தினமாலையில் * ஓராண் வழியாய் உபதேசித்தார் முன்னோர், ஏராரெதிராச ரின்னருளால்—பாருலகிலாசை

யுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் ! கூறுமென்று பேசி வரம்பறுத்தார் பின் * என்கிற பாசுரத்தினு லருளிச் செய்துவைத்தார். ஆழ்வான் ஸ்வாமிக்கு இட்ட தனியனில் "அஸ்மத் குரோஃ பகவதோஸ்ய தயைகஸிந்தோஃ" என்றருளிச் செய்ததுங் காண்க. ஸகல சாஸ்த்ர ஸிந்துவானவர்க்கு இதுவே தன்னேற்றம்.

3. ஹே ஸிந்துகந்யாபதே! = பிராட்டி 'க்ஷீரஸாகரஸம்பவா' என்னப்படுமவளாகையாலே எம்பெருமான் ஸிந்துகந்யாபதி யாயினன்; லக்ஷ்மீபதே! என்னுமல் கந்யாபதே! என்பதில் ஒரு ஸ்வாரஸ்யமுண்டு ; க்ருஷ்ணுவதாரத்தில் நப்பின்னை, ருக்மிணிபோன்ற பல கன்னிகைகளுக்குப் பதியானமையுண்டே. அன்றியும், ஸிந்துபோன்ற [கடல்போன்ற] என்றுகொண்டு, " பதினறு பல்லாயிரமெண்ணிறந்தார் " என்று ஆசார்ய ஹ்ருதயத்திலருளிச் செய்த கணக்கிலே எண்ணிறந்த கன்னிகைகளுக்குப் பதியானமையும் கொள்க. இந்த விளியை எம்பெருமானுர்க்கு நிர்வஹிக்கும்போது லக்ஷிதலக்ஷணுக்ரமம் கொள்ளக் கடவது. அதாவது, ஸிந்துகந்யாபதிஃ—ச்ரியஃ பதிஃ, ச்ரியஃபதிஃ—ஸ்ரீமாந். என்று கொள்வது. * ஸ து நாகவரஃ ஸ்ரீமாந் * லக்ஷ்மணே லக்ஷ்மிஸம்பந்நஃ * அந்தரிக்ஷகதஃ ஸ்ரீமாந் * இத்யாதி ஸ்தலங்களிற்காணும் ஸ்ரீமத்த்வம் ஸ்வாமி பக்கலிலே உபபாதிக்க எளிது.

4. ஹே கம்ஸாந்தக ! = கண்ணன் கம்ஸனுக்கு அந்தகனானது போல, ஸ்வாமி கலிபுருஷனுக்கு அந்தகராயினர். கம்ஸனுடைய மரணம் ஆகாச வாணியினுல் முன்னுடியே தெரிவிக்கப்பட்டது போல, கலியின் கெடுதலும் * பொலிக பொலிகவில் " கலியுங் கெடுங்கண்டு கொண்மின் " என்கிற ஆகாசவாணியினுல் நெடு நாளைக்கு முன்னமே ஸூசிதம். ஆகாசவாணி யென்பதன் பொருள் 'தவருமல் பலிப்பது' என்பதேயாம். இதனுல் கம்ஸனுக்கும் கலிக்கும் ஒற்றுமை. இத்தகைய ஆகாச வாணியை நிறைவேற்றினதன்மையால் கண்ணனுக்கும் ஸ்வாமிக்கும் ஸாம்யம்.

5. ஹே கஜேந்த்ர கருணுபாரீண ! = கண்ணன் கஜேந்திராழ்வானுக்கு அருள் செய்தது ப்ரஸித்தம், ஸ்வாமி திறத்தில், கஜேந்த்ர!, கருணுபாரீண! என்று இரண்டு விளியாகப் பிரித்துக்கொள்வது. நூற்றந்தாதியில் * பண்டருமாறன் பசுந்தமிழ், ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட எங்களிராமானுச முனி வேழம் * என்று ஸ்வாமீ மதயானையாகப் பேசப்பட்டிருப்பது காண்க. அன்றியும், * பெருகுமத வேழம் * என்கிற பூதத்தார் பாசுரத்தை அனந்தாழ்வான் எம்பெருமானுர் பரமாக நிர்வஹித்த கட்டளை நமது ஸதுபந்யாஸ மாலையில் விரிவாகக் கண்டுகொள்ளத் தக்கது. கருணுபாரீண! என்றது 'க்ருபாஜலநிதே!' என்றத்தோடு புநருக்தமாகிறதே யென்று சங்கிக்க வேண்டா. ஸ்வாமி கத்யத்தில் வாத்ஸல்ய குணத்தை இருமுறை கூறினதற்குப் பூருவர்கள் செய்தருளின நிர்வாஹம் இங்கு மொக்கும். ப்ராதாந்யத்தை யிட்டு த்விருக்தி.

6, ஹே மாதவ ! = கண்ணனுடைய மாதவத்வத்தில் விவரணுபேக்ஷையில்லை. ஸ்வாமி திறத்தில் கேளீர். " மதுச் ச மாதவச் ச வாஸந்திகாவ்ருதூ " என்று தைத்திரீய ஸம்ஹிதையில் [நாலாவது காண்டம், நாலாவது ப்ரச்நத்தில்] ஓதினபடி மது வென்று சித்திரை மாதத்திற்குப் பெயர். மதௌ ஜாதஃ—மாதவஃ; சித்திரைத் திங்களில் திருவவதரித்தவரென்றபடி.

7. ஹே ஜகத்த்ரயகுரோ !=கீதாசார்யனுடைய ஆசார்யத்வம் நிருபண நிரபேக்ஷம். எம்பெருமானாருடைய ஆசார்யத்வமும் அப்படியே. "தஸ்மிந் ராமாநுஜார்யே குருரிதி ச பதம் பாதி. நாந்யத்ர" என்று கல்வெட்டுச் செய்து வைத்தார்கள்.

8. ஹே புண்டரீகாக்ஷ !="கஃ புண்டரீக நயநஃ, புருஷோத்தமஃ கஃ" என்னும்படி எம்பெருமானுடைய புண்டரீகாக்ஷத்வம் ப்ரஸித்தம். ஸ்வாமி திறத்திலோவென்னில்; "கம்பீராம்பஸ் ஸமுத்பூத-ஸம்ம்ருஷ்டநாள-ரவிகரவிகஸித-புண்டரீகதளாமலாயதேக்ஷணஃ" என்கிற ஸ்ரீஸூக்தி விசேஷத்தாலே புண்டரீகாக்ஷத்வத்தை நிர்வஹித்தருளினவரென்கை. "தத் கரோதி ததாசஷ்டே" என்கிற வ்யாகரணநுசாஸனம் ஒருவாறு இங்குப் பொருந்தும்.

9. ஹே கோபீஜநநாத !=ஆயர்மட மக்களுக்கு நாதன் கண்ணன். *ரத்நாகரஸ் தவ க்ருஹம் க்ருஹிணீ ச லக்ஷ்மீஃ கிம் தேயமஸ்தி பவதே புருஷோத்தமாய, ஆபீர வாமநயநா ஹ்ருதமாநஸாய துப்யம் ப்ரதத்த மிதமஸ்து மநோ மதீயம் * என்கிற பரமரஸிகருடைய ஸுபாஷிதத்தின்படியே கண்ணனுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டவர்கள் ஆய்ச்சிகள்; ஸ்வாமியின் திருவுள்ளத்தைக் கவர்ந்தவர்களான ஆழ்வான் ஆண்டான் அனந்தாழ்வான் ஆச்சான் போல்வார் கோபீஜநஸ்தாநீயர்களாவர். அன்னவர்களுக்கு நாதர் ஸ்வாமியென்கை மிகப் பொருத்தம்.

10. ஹே ராமாநுஜ !=பலராமனுக்கு அநுஜன் என்கிற ஒரு காரணத்தினால் கண்ணன் ராமாநுஜனவன். ஸ்வாமி யெம்பெருமானார் பலவ்யுத்பத்திகளினால் ராமாநுஜராயினர். ராமஸ்ய அநுஜஃ, ராமஃ அநுஜஃ யஸ்ய ஸஃ, ராமா அநுஜா யஸ்ய ஸஃ.......இங்ஙனே பல வ்யுத்பத்திகளை ஸ்ரீராமாநுஜநாமவைபவம் என்கிற ஸம்ஸ்க்ருத வ்யாஸத்திலே பரக்க வுபபாதித்தோம். [ராமஸ்ய அநுஜஃ] இளைய பெருமாள் போலே கைங்கர்ய ஸாம்ராஜ்ய துரந்தரர். [ராமஃ அநுஜஃ யஸ்ய] பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்தில் பரசுராமனையும் பிற்பட்டவனாக்குபவர். [ராமா அநுஜா யஸ்ய] *பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே * என வாழ்த்தநின்ற ஆண்டாளைத் தங்கையாக வுடையவர். இங்ஙனே பலவுங் காண்க.

---

# ப்ராஸங்கிகமான மற்றோருபந்யாஸம்

கீழே விவரித்த முகுந்தமாலா ச்லோகரத்னத்தில் * ஹே ராமாநுஜ ! * என்று ராமாநுஜ திருநாமத்தினாலே பலராமனுக்கு அநுஜனை கண்ணபிரான் அழைக்கப்பட்டுள்ளதனாலே கண்ணபிரானுடைய அந்தத்திருநாமமே உடையவர்க்குச் சாத்தப்பட்டதென்று கொள்ளுகிற ஸம்பிரதாயமும் ஒன்றுண்டு. யதிராஜ ஸப்ததியில் "சமிதோதய சங்கராதிகர்வஃ ஸ்வபலாத் உத்த்ருத யாதவப்ரகாசஃ அவரோபிதவாந் ச்ருதேரபார்த்தாந் நநு ராமாவரஜஸ் ஸ ஏஷ பூயஃ" என்ற ச்லோகம் இதற்கு ஆதாரமாக அவதரித்ததாகும். கண்ணபிரானுக்கும் உடையவர்க்கும் சரித்ரரீதியிலும் ஸாம்யமுண்டு. கண்ணபிரானாகத் தோன்றின பகவான் செய்த செயல்களும் ஸ்ரீராமாநுஜர்

செய்தருளின செயல்களும் ஒத்திருக்கையாகிற ஒற்றுமைநயம் இனி நிரூபிக்கப் படுகிறது. கீழே யெடுத்துக் காட்டிய * சமிதோதய சங்கராதிகர்வ: * இத்யாதியான யதிராஜஸப்ததி ச்லோக ரத்னத்தில் கண்ணனுக்கும் உடையவர்க்கும் ஸாம்யம் சிலேடையினால் நிர்வஹிக்கப்பட்டுள்ளது: அது வடமொழிக்கடலில் ஆழ்ந்தவர் கட்கே ரஸிக்கக் கூடியது. இப்போது இங்கு நாம் பலபல வகையாக நிரூபிக்கும் ஒற்றுமை சரித்திரப்போக்கில் ஸம்பந்தப்பட்டதாகும். கேண்மின் :— ... *

1. கண்ணபிரான் திருவவதாரஞ் செய்த இடம் சிறைக்கூடம் என்பது உலக மறிந்தது. ஸ்ரீராமாநுஜர் அவதரித்த இடமும் சிறைக்கூடமே. எப்படி யெனில்; * அமரரோடு உயர்விற் சென்று அறுவர்தம் பிறவி யஞ்சிறையே * [திருவாய்மொழி 1—3—11] என்ற நம்மாழ்வார் திருவாக்கின்படி இந்த ஸம்ஸார மண்டலமே ஒரு சிறைக்கூடமன்றோ. இஃது *இருள் தருமா ஞாலமாதலால் இருள் மலிந்த விடத்திலே வந்து பிறந்தார் உடையவர். கண்ணனும் * இருள் நாள் பிறந்த வம்மான் * என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தின்படியும் *வேண்டித் தேவரிரக்க—வீங்கிருள்வாய் வந்து பிறந்ததும் * என்ற நம்மாழ்வார் பாசுரத்தின்படியும் இருள் மலிந்த போழ்தன்றே வந்து பிறந்தது. ... .... .... *

2. கண்ணபிரான் அவதரித்தபோது *ஜாதோஸி தேவதேவேச சங்கசக்ரகதாதர!* என்கிறபடியே சங்கொடு சக்கரமேந்துநீ தடக்கையனுகவே சுடர்விளக்கத்தோடு திருவவதரித்தான். ஸ்வாமி அவதரிக்கும்போதும் நம்போலியரைப்போலே அழுதல் ஆற்றுதல் செய்யாதே மிக்க ஞான வெள்ளச் சுடர் விளக்கத்தையே காட்டிக் கொண்டு அனைவரும் வியப்புறுமாறு அவதரித்தார். .... ... *

3. கண்ணபிரான் பிறந்த விடம் ஒன்று; இளமையில் வளர்ந்த விடம் வேறொன்று; பிறகு வளர்ந்தவிடம் மற்றொன்று. (அதாவது) வடமதுரையிலே பிறந்தது; திருவாய்ப்பாடியிலே இளமையில் வளர்ந்தது; பிறகு முதுமையில் த்வாரகை முதலான விடங்களில் வளர்ந்தது. எம்பெருமானாரும் பிறந்தது ஸ்ரீபெரும் பூதூரில்; இளமையில் வளர்ந்தது காஞ்சீபுரியில்; பிறகு வளர்ந்தது ஸ்ரீரங்கம் திருப்பதி, திருநாராயணபுரம் முதலான விடங்களில். .... ... *

4. [மற்றொரு வகையுமுண்டு;] "திருமந்திரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து" என்கிற நம்முன்னோர்களின் முதுமொழியின்படியே திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தினால் ஸ்வரூபவுணர்ச்சி பெறுதலாகிற பிறவியைப்பெற்று, த்வயம் என்கிற மந்த்ரரத்னத்தின் அநுஸந்தானத்தையும் அதன்படி அனுட்டானத்தை யுமே செல்வ வாழ்ச்சியாகக் கொண்டிருப்பவரென்க. பிறக்குமிடம் திருமந்த்ரம்; வளருமிடம் த்வயம்—ஆக இதனாலும் கண்ணனோடு ஒப்புமை. ... .... *

5. கண்ணபிரான் பிறந்தருளின வயிற்றில் இவனொருவனே பிறக்கவில்லை; *மக்களறுவரைக் கல்லிடை மோத இழந்தவள் தன் வயிற்றில், சிக்கன வந்து பிறந்து நின்றாய் * [பெரியாழ்வார் திருமொழி 5-3-1.] என்கிறபடியே மற்றும் பல மக்கள் பிறந்தாருண்டு; ஆனால் அந்தப் பிள்ளைகளினால் உலகுக்கு யாதொரு

உதவியும் நேர்ந்ததில்லை; அவர்கள் பிறந்ததும் இறந்ததுமே தெரியவருகின்றது. இதுபோல, எம்பெருமானார் திருவவதரித்த இவ்வுலகத்தில் மற்றும் பலபேர்களும் ஒக்கப்பிறக்கின்றார்களெனினும்; அவர்களால் உலகுக்கொரு நன்மையுமில்லை யாயிற்று. அவர்களின் பிறப்பும் இறப்புமேதான் உலகுக்குத் தெரியும். .... *

6. கண்ணபிரான் வடமதுரையில் நின்றும் திருவாய்ப்பாடிக்கு எழுந்தருளும்போது "வஸுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோதகோ யயௌ" என்னும்படி பேராழமான பெருவெள்ளமும் முழந்தாளளவாக வற்றிப்போயிற்றென்று தெரிய வருகிறது. அதுபோல, நம் ஆசாரியர் சிறிது ஸஞ்சரிக்கத் தொடங்கும்போதே "பிறவியென்னுங் கடலும் வற்றிப் பெரும்பதமாகின்றதால்" என்ற பெரியாழ்வார் திருவாக்கின்படியே ஸம்ஸாரமாகிற பெருங் கடலும் வற்றத் தொடங்கிற்றென்க. *

7. பராத்பரனான பெருமான் தனது பெருமைகளை யெல்லாம் மறைத்து அடக்கிக்கொண்டு நீறு பூத்த நெருப்புப்போலேயாகி இடக்கை வலக்கை யறியாத ஆயர்களோடே கலந்து பழகினான்; அதுபோல எம்பெருமானாரும் மிகுஞானச் சிறு குழவியாய்த் தமது ஞானசக்திப் பெருமைகளையெல்லாம் மறைத்துக்கொண்டு அறிவிலா மனிசரோடே கலந்து பழகியிருந்தனர். கண்ணன் இடையர்களோடு மாத்திரம் கலந்து பழகி யிருந்தானல்லன்; தன்னை வதைக்க வழிபார்த்திருந்த ஆஸுர ப்ரக்ருதிகளோடும் கலந்திருந்து காலங் கழித்தனன். எம்பெருமானாரும் தம்மை மாய்க்க வெண்ணின யாதவப்ரகாசர்போல்வாரிடத்திலும் கலந்திருந்து காலங்கழித்த துண்டே. கண்ணன் விரோதிகளை முடித்தனன்; இவர் வாழ்விப்பதும் செய்தனர். *

8. வளர்ந்தருளுமிடத்தில் தீயபுந்திக் கஞ்சனால் ஏவப்பட்ட பூதனை தாய் வேஷம் பூண்டுவந்து நஞ்சு தீற்றிய முலையை உண்ணக் கொடுத்துக் கண்ணனைக் கொல்ல முயன்று தானே முடிந்துபோனாள்; இந்தப் பூதனையின் வரலாற்றைப் பேசுகின்ற தேசிகர் யாதவாப்யுதயத்தில் *கம்ஸப்ரயுக்தா கில காபி மாயா * என்று மாயை என்கிற சொல்லால் கூறினர். மாயை யென்று மூலப்ரக்ருதிக்குப் பெயர். அது உண்மையில் விஷம்போன்றதாயிருக்கச் செய்தேயும் தன்னிடத்தில் போக்யதா புத்தியை யுண்டுபண்ணிக்கொண்டு தன் பக்கலிலே யீடுபடுத்தி நம்போல்வாரை முடிக்கப்பார்க்கிறது. இப்படியே ஆசாரியரையும் முடிக்கப் பார்க்கையில் அவரை முடிக்க மாட்டாமல் அவரது அளவற்ற பெருமையினால் தானே முடிந்து நின்றது. *

9. * கள்ளச் சகடங் கலக்கழியக் காலோச்சி * [திருப்பாவை- 6] என்றபடி அஸுராவேசம் பெற்றவொரு சகடத்தைக் கண்ணன் திருவடிஸ்பர்சத்தால் தொறுக்கி முறித்து முடித்தனன் என்பது ப்ரஸித்தம். எம்பெருமானாரும் தமது திருவடி ஸ்பர்சத்தினால் சகடபங்கஞ் செய்தவரே. (எப்படியெனில்) ஓரிடத்தி லிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுபோகும் ஸாதனம் சகடமெனப்படுவது. இங்கிருந்து நாம் அப்பால் செல்லப் பல வழிகளுண்டு; நரகம் சுவர்க்கம் முதலான வற்றின் வழிகளிற் கொண்டு செல்லுவது கள்ளச் சகடமாகும்; எம்பெருமானாருடைய திருவடி ஸம்பந்தத்தினால் அது தொலைந்தொழிந்ததேயாம். அர்ச்சிராதி மார்க்கமாகிய நல்வழியிற் செல்லும் ஸாதனமே மேம்பட்டுத் தீயவழிகளில் செல்லும் ஸாதனம் சிதைந் தொழிந்ததென்க. ... .... ... .... *

10. கயிற்றினால் கட்டி ஒருரலிலே பிணித்துவிடப்பெற்ற கண்ணன் அவ்வுரலையுமிழுத்துக்கொண்டு தவழ்ந்து இரட்டை மருதமரங்களின் நடுவே யெழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அந்த இரட்டை மரங்களிரண்டும் முறிந்து விழுந்தனவாக யமளார்ஜுன பங்க விருத்தாந்த முள்ளது. இணைபிரியாதே நின்ற இரட்டை மருத மரங்கள்போல இணைபிரியாது நின்று நம்மை நலியுமவை பலவுண்டு; பகவத்கீதையில் நான்காவது அத்யாயத்தில் * த்வந்த்வாதீதோ விமத்ஸரঃ * என்றும், ஏழாவது அத்யாயத்தில் * த்வந்த்வமோஹேந பாரத ! * என்றும் பதினைந்தாமத்யாயத்தில் * த்வந்த்வைர் விமுக்தாஸ் ஸுக துঃக்க ஸம்ஜ்ஞைঃ * என்றும் இப்படிப் பலவிடங்களில் த்வந்துவம் (இரட்டை) என்று பல சொல்லப்பட்டுள்ளன; இன்பு துன்பு, அஹங்கார மமகாரம், காமக்ரோதம், புண்ணிய பாபம்....என்னுமிவையெல்லாம் இரட்டைகளாம். இவையெல்லாம் எம்பெருமானார் திருவடி ஸம்பந்தம் பெற்றவளவிலே இற்றொழிந்தனவென்க. " காமாதி தோஷஹரமாத்மபதாச்ரிதாநாம் ". ... .... ... *

11. * வையமேழுங் கண்டாள் பிள்ளைவாயுளே * என்றும் * வாயுள் வையகங் கண்ட மட நல்லார் * என்றும் சொல்லுகிறபடியே கண்ணபிரான் தனது திருவாயில் ஏழுலகங்களையும் அன்பர்களுக்குக் காட்டினன். அதுபோல எம்பெருமானாரும் 1. ச்ருதிகள், ஸ்மிருதிகள், 3. இதிஹாஸங்கள், 4. புராணங்கள் 5. பாஞ்சராத்ரங்கள், 6. ஆழ்வாரருளிச்செயல்கள், 7. ஆசார்ய திவ்யஸூக்திகள் ஆகிய ஏழையும் தமது திருவாக்கில் அன்பர்கட்குக் காட்டியருளினர். ... *

12. யமுனையாற்றில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்னியினால் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பெருங்கேடு விளைத்த காளியனென்னுங் கொடிய நாகத்தைக் கண்ணபிரான் கொழுப்படக்கினன். இவ்வரலாற்றை யாதவாப்யுதயகாவியத்தில் தேசிகர்கூறுமிடத்து(4-125) ஸ்ரீராமாநுஜர் செய்தருளின செயலையே உவமையாகக் காட்டியருளினர். ஐந்தலைவாய் நாகமாகிய காளியன் யமுனையாற்றைக் கலக்கிக் கெடுத்தது—விஷவாக்குக்களான புறமதத்தவர்கள் மனம்போனபடியெல்லாம் கூறும் தவறான பொருள்களினாலே வேதங்களைக் கெடுத்த படியாம். அந்தக் கெடுதியைக் கண்ணபிரான் நீக்கி யமுனையை எல்லாரும் இனிமையாகப் பருகும்படி செய்தது—ஸ்வாமி தவறான பொருள்களை நீக்கி நல்ல பொருள்களை வெளியிட்டு வேதத்தை ஸத்துக்களுக்கு உபஜீவ்யமாக ஆக்கின படியாம். யமுனையின் ஸ்தானத்தில் வேதம்; காளியன் ஸ்தானத்தில் விஷவாக்குக்களான குதர்க்கவாதிகள்; கண்ணன் ஸ்தானத்தில் ஆசாரியர். * தூய பெருநீர் யமுனைத் துறைவனை * என்னும்படி யமுனையாறு இடையறாத பகவத் ஸம்பந்தத்தை யுடையதாயிருந்ததுபோல வேதமும் பகவத் ஸம்பந்தத்தை நியதமாக வுடைத்தாயிருக்குமாயிற்று. ... ... ... ... *

13. காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சை யுமிழ்ந்து நாசம் விளைவித்தது போல் புறமதத்தவர்கள் ஐந்துவிதமான துர்வாதங்களாலே நாசத்தை விளைவிக்கின்றனர்; (எப்படி யென்னில்) 1. ஈச்வரனே யில்லையென்னுதல். 2. ஈச்வரன்

உண்டெனிலும் அவன் அநுமானத்தால் ஸித்திப்பவனேயன்றி சாஸ்த்ரத்தால் ஸித்திப்பவனல்லன் என்னுதல்; 3. சாஸ்த்ரங்களைக்கொண்டு ஈச்வரனை அங்கீகரித்தும் அவனுக்குக் குணங்களும் விக்ரஹமும் இல்லை யென்னுதல்; 4. ஈச்வரன் ஒருவனே யென்பதில்லை, பல ஈச்வரர்கள் உண்டென்னுதல்: 5. பிரபஞ்சமே யில்லை—ஸர்வம் சூன்யம் என்னுதல். ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்தங்களினால் புறமதத்தவர்கள் வேதங்களைக் கெடுக்க, அந்தக் கெடுதல்களை எம்பெருமானார் போக்கியருளினர். காளியன் தலையிலே கண்ணபிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப்போலே * நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகண்மீதே * (திருமாலை—1) என்ற கணக்கிலே யமபடர்களின் தலைமீதும் குத்ருஷ்டிகளின் தலைமீதும் கூத்தாடப் பெறுவோம். * ததந்யமததுர்மதேத்யாதி.

14. குதிரையின் வடிவங்கொண்டு மஹாபயங்கரனாகவந்த கேசி யென்னு மஸுரனைக் கண்ணபிரான் தொலைத்தருளினன்; அதுபோல நம் பேராசிரியர் * இந்த்ரியாணி ஹயாநாஹு: * என்ற உபநிஷத்தின்படியே குதிரைகளாகச் சொல்லப்பட்ட இந்திரியங்களின் வலியை யடக்கி ஜிதேந்த்ரியராய் * மதநகதநைர் நக்லிச்யந்தே யதீச்வரஸம்ச்ரயா: * (யதிராஜஸப்ததி) என்று சொல்லும்படி வாழ்ந்தவர்.

15. கம்ஸனால் ஏவப்பட்ட அசுரர்களில் ஓரசுரன் விளாமரத்தின் வடிவமாய், தன் கீழே கண்ணன் வரும்போது மேல்விழுந்து கொல்வதாக எண்ணிவந்து நிற்கவும், மற்றொரு அசுரன் கண்ணனை முட்டிக் கொல்லும்பொருட்டுக் கன்றின் வடிவுகொண்டு நிற்கவும் இவற்றையறிந்த கண்ணபிரான் "விளவின்காய் கன்றினால் வீழ்த்தவனே". "கன்றுகொண்டு விளங்கனியெறிந்து" என்கிறபடியே கன்றைச்சுழற்றி விளவின் மீதெறிந்து இரண்டையும் ஒருசேர முடித்தருளினன் என்ற வரலாறு முள்ளைக்கொண்டே முள்ளைக் களைகிறபடியைக் காட்டுகின்றது. இதுபோலவே ஸ்வாமீ ஸ்ரீ பாஷ்யகாரர் புறமதங்களைக் கண்டிக்குமிடத்து அவை பரஸ்பர வ்யாஹதங்களா யிருக்கும்படியை நன்கு நிரூபித்துக்காட்டி அவைகளைக் கொண்டே அவற்றை மறுத்தொழிப்பவர். .... .... .... *

16. இடையர்கள் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜை செய்யப் பற்பல வண்டிகளில் சோறும், தயிரும், நெய்யும், காய்கறிகளும் சேகரிப்பதைக்கண்டு கண்ணன் அப்பூசனை யனைத்தையும் கோவர்த்தன மலைக்கே இடும்படி கட்டளையிட்டுத் தானே ஒரு தேவதாரூபங் கொண்டு அவற்றை முற்றும் அமுதுசெய்தருள, இந்த்ரன் பசிக் கோபத்தினால் மேகங்களை ஏவிக் கடூரமான கல்மழையை ஏழுநாள் பெய்விக்க, அதனால் யார்க்கும் யாதொரு தீங்கும் நேரிடாதபடி கண்ணன் அம்மலையையே குடையாக வெடுத்துப் பிடித்து நின்றனன் என்பது ப்ரஸித்தமான கதை; தேவதாந்தரத்திற்கு வழிபாடு செய்வதைப் பொறுத தன்மையும் அந்த வழிபாடுகளையெல்லாம் தானே ஏற்றுக்கொள்ளும் தன்மையும், அதனால் எதிரி என்ன தீங்கு செய்ய நினைத்தாலும் அதற்குப் பிரதியாகத் தீங்கிழைக்க நினையாத பெருந்தகவும், தன்னையடுத்தவர்களைத் தாம் ரக்ஷித்துக்கொண்டு நிற்றலுமாகிய விஷயங்கள் இவ்விதிஹாஸத்தில் கிடைக்கின்றன. * மறந்தும் புறந்தொழா மாந்தர் * என்றிருக்குமாசிரியர் தேவதாந்தர பஜனத்தைச் சிறிதும் ஸஹியார்,

"திருவில்லாத் தேவரைத் தேறேல்மின் தேவு" என்று துணிந்து உபதேசிப்பர். * ஸாக்ஷாத் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாந் உத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா * என்றும் * பீதகவாடைப் பிரானார் பிரமகுருவாகி வந்து* என்றுஞ் சொல்லுகிறபடியே எம்பெருமானே ஆசார்யனாக வந்து பிறந்ததனால் ஆராதனைகளெல்லாம் ஆசார்யனுக்கே சேரும். "குற்றஞ் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்" (ஸ்ரீவசனபூஷணம் 305) என்றிருப்பவர் ஆசார்யராகையாலே தீங்கிழைப்பவர் திறத்திலும் ப்ரதியாகத் தீங்கிழைக்க நினையார். பெருமழையில் நின்றும் கண்ணன் காத்தருளினது போல * அவிவேக கநாந்த திங்முகே பஹுதா ஸந்ததது:க்கவர்ஷிணி—பவ துர்த்திநே * (ஸ்தோத்ரரத்னம் 49) என்னப்பட்ட பெருமழையில் நின்றும் (அதாவது, ஸம்ஸாரத் துயர்ப் பெருமழையினின்றும்) காத்தருளினர். கண்ணன் ஏழுநாள் காத்தனன். ஆசிரியர் காப்பது ஏழேழ் பிறவிக்கும். .... .... *

17. கண்ணன் நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்துகொள்ளுதற்காக, அவளது தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி அஸுராவேசம்பெற்ற ஏழு எருதுகளை வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்துகொண்டனன். நம் பரமாசார்யர் "எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கள ஸூத்ரம்போலே திருமந்த்ரம்" (முமுக்ஷுப்படி 113) என்கிறபடியே திருமந்த்ரமாகிற திருமங்கலியத்தை சேதநர்களுக்குக் கட்டி விவாஹம் நடத்துகைக்கு அங்கமாக, காமம், க்ரோதம், லோபம், மோஹம் மதம் மாத்ஸர்யம் அஸூயை என்கிற ஏழு விரோதிகளையும் தொலைத்தருளுவர். கண்ணன் இரண்டு மல்லர்களை மடித்ததுபோல ஆசிரியர் * நீர் நுமதென்றிவை வேர்முதல் மாய்த்து * என்கிறபடியே அஹங்கார மமகாரங்களை அடியறுக்குமவர். கண்ணன் குவலயாபீடமென்கிற கம்ஸனது மதயானையை முடித்தாப்போலே "மதக்களிறைந்தினையும் சேரி திரியாமல் செந்நிறீஇ" என்கிற பொய்கையார் பாசுரத்தின்படியே மதகளிறுகிய இந்திரியத்தின் கொடுமையைத் தொலைப்பவர்.

18. கண்ணன் மாலாகாரர் திருமாளிகைக் கெழுந்தருளி அவர் தந்த பூவைப்பெற்று உகந்ததுபோல நம் ஆசிரியர் * அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பமிந்த்ரிய நிக்ரஹ:, ஸர்வபூததயா புஷ்பம் க்ஷமா புஷ்பம் விசேஷத:, ஜ்ஞாநம் புஷ்பம் தப: புஷ்பம் த்யாநம் புஷ்பம் ததைவச, ஸத்யமஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத் * என்னப்பட்ட எண்பகர் பூவையும் சிஷ்யர்கள் பக்கலிலே செழித்து வளரக் கண்டுகப்பவர்.

கண்ணபிரான் கம்ஸ சிசுபால கௌரவ ப்ரப்ருதிகளை முடித்துப் பஞ்சபாண்டவாதிகளை வாழ்வித்தது போல நம் பரமாசார்யர் * தறக்கச் சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன் சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும் நான்மறையும் நிற்கக் குறும்பு செய்நீசரும் மாண்டனரென்னும்படியாக * நாட்டிய நீசச் சமயங்களை மாள்வித்து அர்த்தபஞ்சகாதி விசேஷார்த்தங்களாகிற ஐவரை விளங்கச்செய்தனர்.

— எம்பெருமானார் திருவடிகளே சரணம் —



ஸ்ரீ:

    

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீ காஞ்சீ நம்பிள்ளை மஹோத்ஸவ ப்ரகடன பத்திரிகை

## (ஸௌம்ய வருஷ 1969)

ஸ்ரீ காஞ்சீ தேவப்பெருமாள் ஸன்னிதியின் திருமுன்பே திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் நம்பிள்ளைக்கு நாளது கார்த்திகைமீ 29வ (14–11–69) வெள்ளிக்கிழமை பூராட நக்ஷத்திரத்தில் திருவவதார மஹோத்ஸவம் தொடக்கமாகி கார்த்திகைமீ 8வ (23–11–69) ஞாயிற்றுக்கிழமை திருக்கார்த்திகைத் திருநக்ஷத்திரத்தில் சாற்றுமுறையாகும். பத்து நாட்களிலும் அலங்கார திருமஞ்சனமும் இரண்டுவேளைகளிலும் திவ்யப்ரபந்த ஸேவை கோஷ்டிகளும் ததீயாராதனமும் விசேஷ வைபவமாக நடைபெறும். வித்வான்களின் உபந்யாஸங்களும் நடைபெறும். ஆஸ்திகர்கள் அனைவரும் வந்திருந்து அநுபவித்து ஆனந்திக்க வேணும். இம்மஹோத்ஸவ ஸேவார்த்தமாக வெளியூர்களிலிருந்துவரும் பக்த பாகவதோத்தமர்களுக்கு ஸ்தல வசதி முதலிய ஸௌகரியங்கள் விசேஷமாகச் செய்து கொடுக்கப்படும். ஸ்ரீ வைஷ்ணவ பக்த சிகாமணிகள் குழாங்கூடியிருந்து அநுபவிக்கக்கூடிய மஹோத்ஸவமிது.

சாத்துமுறையன்று ஸ்ரீ யதோக்தகாரி எம்பெருமான் புறப்பாடு கண்டருளியெழுந்தருளியிருந்து நடைபெறும். இரண்டாயிரம் ரூபாய் செலவில் விசேஷ வைபவங்களுடன் நடைபெற்றுவருகின்ற இந்த மஹோத்ஸவத்திற்கு பக்தர்கள் உகந்து யதாசக்தி பொருளுதவி புரிந்து ஆசார்ய ஸார்வபௌமருடைய இம் மஹோத்ஸவத்தை மிகவும் சிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப் படுகிருர்கள்.

இங்ஙனம்,
P. B. ANNANGARACHARYA,
Founder Sri Nampillai Sannidhi.

சின்ன காஞ்சீபுரம்,
1—11—69.



# ஸ்ரீ ராமாநுஜன் 250-ல் கண்ட நமது வேண்டுகோளை மதித்து அன்பு காட்டியவர்களின்

# அட்டவணை.

அவரவர்கள் செலுத்திய தொகையில் ஏற்றத்தாழ்வு மிக இருந்தாலும்
அதைப் பிறகு வெளிடுவதாக விட்டிட்டு, இவர்களெல்லாரும்
ஸபை மெம்பர்களாகக் கொள்ளப்பட்டவர்களென்பதை
மட்டும் இங்குத் தெரிவிப்பதாகக் கொள்க.

## 25-10-1969 தேதிவரைக்கும்

Madras-1. (G. T.)

ஸ்ரீ P. B. அனந்தாசாரியர், Advocate.
ஆஸூரி. (பொ.) திருவேங்கடாசாரியர்
மா.ரங்கஸ்வாமி ஐயங்கார் Hoe & Co.,
V, N. தேவநாதன்
P. G. மாணிக்க செட்டி
A. N. ரங்கஸ்வாமி ஐயங்கார்
A. S. Vasan & Sons,
T. S. Vasan
M. R. Seshadri Iyengar
M. R. Devarajan
S. Annamalai
Dr. வெங்கடகிருஷ்ணய்யா
M. ஏகாம்பர முதலியார்

Madras - 2.

D. Krishnamoorthi

Madras - 3 (P. T.)

K. Thiruvenkatachariar, Advocate

Madras - 4 மயிலை

G. Dwarakanath
Brahmasri R. Ramachandran
K. K. A. ராகவாசாரியர்
N. Bhakthavathsala Iyengar, M.A.,

Madras - 5 திருவல்லிக்கேணி

K. S. Champakesayyangar, Advocate
K. S. Srinivasachariar
N. Ramakrishnan
K. Thathachariar, Pandit
M, O. A. Editor Bhakthan

திருவல்லிக்கேணி தொடர்ச்சி.

P. M. Srinivasayyangar Rtd. Judge
Desoor Srinivasavaradachariar
M. A. வெங்கடகிருஷ்ணன்
திருக்கண்ணபுரம் ராமாநுஜாசாரியர்
கபிஸ்தலம் ஸ்ரீநிவாஸாசாரியர்
M. V. கிருஷ்ணன் and M. Subhadra
K. M. ராமாநுஜய்யங்கார் (தென்திருப்பேரை)
V. V. Ramanujam M.A.,
Nangur P. B. A. Rangarajan

Madras - 6

T. C. A. Anandalwar. Advocate
N, Venkatapathi

Madras - 7 வேப்பேரி

P. K. Madhavan Sarvodaya

Madras - 8 எழும்பூர்.

R. V. Seshadri, Advocate
V. C. Rangadurai

Madras - 10 கீழ்ப்பாக்

V. Rajagopalachariar M. L.,
Raosahib S. Rangasami Iyengar.

Madras - 16 ஆலந்தூர்

W. Rajaram Naidu

Madras - 17 டி. நகர்

Bao Sahib S. Raghavayyangar
R. Varadan (Agaram)
Desoor Ramanujachariar

Madras - 17 தொடர்ச்சி.
T. G. Aravamudaiyangar, Advocate
P. T. Srinivasan
M. Kuresalu Naidu

Madras - 18
Justice A. Alagirisami
V. C. Padmanabha kalyani
M. Padmanabhan

Madras - 19
V. P. Rangacharyar

Madras - 21
G. Parthasarathi Iyengar

Madras - 24
S. Ramaswami Iyengar
Doctor Sampath Iyengar

Madras - 25
V. S. Sundararajan M.A.,

Madras-30 ஷெணய் நகர்
A. Thiruvengadathan, M.A.,

Madras-33 மேல மாம்பலம்
Kanchi P. B. Narasimhachari

Madras-42
வங்கீபுரம் ராஜமையங்கார்

Madras-44
R. திருவேங்கடஸாமி ஐயங்கார்

Madras அம்பத்தூர்
A. K. Satakopachariar

Madras-49 வில்லிவாக்கம்
V. வெங்கடவரதாசாரி

ஆழ்வார்திருநகரி
கீழத்திருமாளிகை போத்தி ஸ்வாமி
ஸ்ரீமத்பரமஹம்ஸ. எம்பெருமானார் ஜீயர்
R. P. ராமையங்கார்
J. சடகோபாசார்ய சிரோமணி
V. N. பெரியன் ஸ்வாமி
ஸ்ரீமதி. ரங்கம் ஜானகி

ஆமூர். A. கோபாலையங்கார்

அம்ருதூர். A. R. வெங்கடாசாரி

அந்தர்வேதிபாளயம்
ஈயுண்ணி சேஷசிங்கராசாரியர்

அச்சந்தவிழ்த்தான் A. S. அப்பன்

பெங்களூர் Bangalore
S. திருவேங்கடத்தய்யங்கார்
மாஸ்தி. ரங்கஸாமி ஐயங்கார்
E. S. Bhuvarahan M.A.,
Doctor V. Ramayyangar
S. திருமலை ஐயங்கார்
Bhavani D. L. Venkatachar
Chidambaram R. Padmanabhan
Chittoor K V, Narasimhan, Auditor
,, Mahalakshmi Industrial

கோவை Coimbatore
ஸ்ரீ. உ. வே. வேதவ்யாஸ பட்டர் ஸ்வாமி
C. Ramaswami Iyengar B.A., B.L,,
S. S. P. Raghavachariar
ரிக்வேதி. B. வரதாசாரியர்
R. ராமசந்திரன்
A. ஸௌம்யநாராயணையங்கார்
Dr. Sundararajan M.B.B.S.
R. Govindarajan

Dharmapuri M. P. ஜயகோபால்
தாமல் வங்கீபுரம் ஸ்ரீநிவாஸாசாரியார்
ஈரோடு K. P. சந்திரகாசன்
,, V. எதிராஜன்
ஏரணுகுலம் T. M. ஸ்ரீநிவாஸன்
Gwaliar S. Sathyamoorthiswami
Gobichetty Ranganachiyar
Gandamanayakanoor S. Seshadri
Hyderabad M. Soundararajanswami
,, K. Gopalan, Deputy Commissiner
Jathawar V. Ramayavarachar Swami's Son.

காஞ்சீபுரம் Kancheepuram
Indian Bank Manager, Srinivasayyangar
Auditor Kasthuri Rajagopalachariar.
கந்தாடை ஸ்ரீராமதாசரதி ஐயங்கார்
கோயில் பிரதிவாதிபயங்கரம் கண்ணமாசார்
Kalamboor K, S. ராமநாதன் செட்டியார்

கரியமாணிக்கம் V. ஸ்ரீநிவாஸய்யங்கார்

காரைக்குடி T. R, வெங்கடாசாரியர்

காட்டுமன்னார்கோவில் V. ஸ்ரீராமுலு
குன்னத்தூர்புதூர் மாசி செட்டியார்
கோமடிபல்லி S. V. வெங்கட பட்டர்
காரியாண்டி P. ரகுநாதன்
கும்பகோணம் நம்பெருமாள்
கைலாஸபுரம் S. நாராயணன், (திருச்சி)
Katpadi Kasthuri Raghavachariar, Auditor
மதுரை Dr. V. சேஷராமாநுஜய்யர்
,, A. Ranganathan, Advocate
,, B. R. நாகஸாமி (உபயவே ஸபா)
,, S. ஸுந்தரராஜய்யங்கார், Advocate
,, கோமடம். ச. ராமாநுஜாச்சாரி
,, விளாஞ்சோலைப் பிள்ளை
,, V. T ஆழ்வார், (தாதனேரி P. M.)
,, எதிராஜ நிவாஸ்
மேட்டுப்பாளயம் M. V. பாலக்ருஷ்ண நாயுடு
மன்னார்குடி P. L. A. ஸ்ரீநிவாஸராமாநுஜம்
மணச்சநல்லூர் பெரியண்ணரங்கநாத்
மதுரபாக்கம் வீரராகவ ராமாநுஜம்
மேட்டூர்டாம் செந்தாமரைக்கண்ணர்
மல்லேச்வரம் பண்டிதபூஷணம்
R. A. கிருஷ்ணமாசாரியர்
மண்டயம் ஸ்ரீ வைஷ்ணவஸ்தீமணி
Mysore V. T. Thirunarayana Iyengar
New Delhi V. P. Narasimhan
,, P. N. Krishnaswami Iyengar
,, S. R. S, ராஜலக்ஷ்மி
நெசனூர் சடகோபராமாநுஜம்
நேமத்தான்பட்டி R. ஸ்ரீநிவாஸன்
நெல்லூர் Dr. ராமையங்கார்
,, C. V. Raghavan
நாங்கூர் T. S. ராமாநுஜாசாரியர்
,, K. கண்ணம்மா
நாங்குனேரி வா. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார்
,, T. ஸீதாராம சாத்தாதவர்
,, V. S. தோநாத்ரி ஐயங்கார்
நெய்வேலி பட்டர்பிரான்
,, அலமேலம்மாள்
பரமகுடி. கொண்டா. J. கேசவராமன்
புராணசிங்கபாளையம் சக்ரபாணி
பெரியகுளம் Dr. Prasannam
,, K. Venkataramanujam
பாண்டிச்சேரி R. ஜகன்னாதய்யங்கார்
,, T. S. N. ஸுந்தரராஜ பாகவதர்
Poona N. Veeraraghavan
பழனி ஜயராமன் செட்டி
ராஜபாளையம் D. K. Raju
சீர்காழி G. Varadarajan
,, K. Rangachariar
சீர்காழி V. Rajagopala Pillai
சேரங்குளம் K. R. ராஜகோபாலையங்கார்
சிரகிக்கோட்டை R. நாராயணையங்கார் B.A.,
சிறுக்ராமம் S. தேவநாதன், திருவேந்திபுரம்.

ஸ்ரீபெரும்பூதூர்

ஸ்ரீமத்பரமஹம்ஸ. எம்பார் ஜீயர்ஸ்வாமி
ஸ்ரீமத்பரமஹம்ஸ எதிராஜ ஜீயர்ஸ்வாமி
கீழ்ப்பாலூர் T. K. கிருஷ்ணராமாஜம்
,, வேலாயுத நாடார்
ஸ்ரீரங்கம் பரமஹம்ஸ, ஸ்ரீரங்கநாராயண ஜீயர்
,, ஸ்ரீஸூக்திரத்னகர இளையவில்லிஸ்வாமி
,, K. நரஸிம்ஹய்யங்கார்
,, அரையர் சடகோபாசாரியர்
,, எம்பார் விஜயராகவாசாரியர் பாகவதர்
,, ராமாநுஜய்யங்கார், சேலம்
,, உத்தமநம்பி சடகோபாசாரியர்
,, K. N. சேஷாத்ரி
,, ஸன்னிதிகைங்கரியம் ஸ்ரீநிவாஸன்
,, R. கண்ணனையங்கார்
,, M. A. ஸுந்தரராஜன்
ஸகிந்தராபாத் M. V. பாஷ்யமையங்கார்
,, மீஞ்சூர் வரதாசாரியர்
,, V, T. ஸ்ரீரங்காசாரியர்
ஸ்ரீவில்லிபுத்தூர் பரமஹம்ஸ திருமெய்யம் ஜீயர்
,, R. பார்த்தஸாரதி ஐயங்கார்
ஸத்யமங்கலம் P. S. ஸ்ரீநிவாஸாசாரியர்
சேலம் R. Radhakrishnan கரியமாணிக்கம்
,, S. R. Govindarajulu
திருப்பதி P. S. வெங்கடராகவாசாரியர்
,, N. S. ராமாநுஜாசாரியர்
திருமலை P. V. அனந்தசயனமையங்கார்
திருவுள்ளூர் கனபாடி. அர்ச்சக நரஸிம்ஹாசாரி
திருமாணிக்குழி லக்ஷ்மீநாராயண ரெட்டியார்
திருக்கண்டீசுரம் முத்துநாராயண ரெட்டியார்
திருவேந்திரம் A. Gopalan
தூத்துக்குடி V. S. அழகிரிசாமி செட்டியார்
தென்திருப்பேரை மகரபூஷணமையங்கார்
திருச்சி P. ராமஸ்வாமி
,, K. R. ரத்னபாயி
,, R. பாஷ்யசக்ரவர்த்தி ஸ்வாமி
திருக்கண்ணங்குடி தாமோதராசாரியர்
திருக்குறுங்குடி N. ஸ்ரீநிவாஸய்யங்கார்
திருப்பத்தூர் K. A. ஷண்முக முதலியார்
திருப்பாபுலியூர் T. S. Ramanujachar, Advocate
Vuraiyur A. S. ராமையங்கார்
வள்ளியூர் T. N. கிருஷ்ணமாசாரியர்
வளவனூர் R. வெங்கடராகவாசாரியர்
விட்டலாபுரம் V. S. வெங்கடாசாரியர்
விராமதி T. கோவிந்தய்யங்கார்

குறிப்பு:—காரியஸ்தர்களின் கவனக்குறைவினால் இந்த அட்டவணையில் யாருடைய பெயராவது விட்டிருந்தால் பொறுமையுடன் தெரிவித்தால் அடுத்த ஜாபிதாவில் சேர்த்துவெளியிடுவோம்.

(2) அடுத்த இதழோடு ஸ்ரீராமாநுஜனுக்கு இருபத்தோராவது பிராயம் முடிவடைகிறது.*